# ஔவையின்
# மனுதத்துவம்

விளக்கம்

**தவத்திரு. கார்த்திகேசு சுவாமிகள்**

தத்துவ ஞானத் தவச்சாலை வெளியீடு
கொழும்பு அருளொளி நிலையம்
31/21, டோசன் வீதி, கொழும்பு - 2.
தொலை பேசி - 331439

முதற்பதிப்பு - ஆவணி 1996

**பொருளடக்கம்**




ஸ்ரீ.கார்த்திகேசு சுவாமிகள் நூற்றாண்டு
நினைவு வெளியீடு — 1
அறநெறிப் போட்டிக்கான பாடத்திட்டம்




# பதிப்புரை

"மூத்தோர் சொல்வார்த்தை அமிர்தம் " என்பது ஆன்றோர் வாக்கு. வயதில், ஆழ்ந்த புலமையில், தெளிந்த அனுபவத்தில் முதிர்ந்தவராக மூத்தவராக விளங்கியவர் நம் மூதாட்டி ஔவை. இவர் தமிழ் புலவராக மட்டுமல்லாது மெய்ஞ் ஞானியாகவும், தீர்க்கதரிசியாகவும் விளங்கியவர்.

அவர் தமது முற்றறிவை இளம் தலைமுறையினருடன் பகிர்ந்துகொள்ளும் ஊடகங்களாக அமைந்தவையே ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி முதலாம் மனுதத்துவச் சுவடிகள். இவை அளவில் சிறியனவாயும், கற்றற்கு எழிய தாக இலகு தமிழிலும், அமைந்திருக்கின்றன. சிறுவர் முதல் விருத்தாப்பியர்வரை கற்றுப் பயனடையத்தக்கவை. அகராதி போல வாழ்க்கையில் ஏற்படும் சோதனைகள் வேதனை களில் உற்ற வழிகாட்டியாகவும் அமைகின்றன.

கொழும்பு அருளொளி நிலையம், தனது ஸ்தாபகர் அருட்திரு கார்த்திகேசு சுவாமிகளின் நூற்றாண்டு நினைவாக இந்த அமிர்த கலசத்தை பதிப்பித்து வெளியிடுகிறது. வெளியிடுவதோடு அல்லாமல், இது முறையாக மாணவச் செல்வங்களிடம் சென்றடைந்து, அதன் கருத்துக்கள் அவர்களது உள்ளங்களில் பசுமரத்தாணி போல் பதிந்து பயன் தரும் வகையில் ஒரு போட்டிப்பரீட்சையையும் நடத்துகிறது.

ஔவையின் மனுதத்துவம் என்னும் பெயரில் இந்நூல் வெளியிடப்படுகிறது. கார்த்திகேசு சுவாமிகளிடம் குருகுல முறையில் தாம் கற்றுக்கொண்ட விளக்கங்களைத் தொகுத்து இந்நூலை அமைத்துள்ளார் திரு. சிவகுருநாதன் அவர்கள்.

கலர் டொட்ஸ் நிறுவனம் அழகுற கணனி அச்சுக் கோர்வை செய்து உதவியுள்ளது. பிரதி ஒத்துப் பார்த்தலுக்கு திரு.சி.இராஜேந்திரன், செல்வி.ச. இலிங்கேஸ்வரி இருவரும் பெரிதும் உதவியுள்ளார்கள்.

நூலை அச்சிடுவதற்கான காகிதத்தை சகாய விலையில் தந்துதவியுள்ளார் திரு. ஐ. அண்ணாமலை அவர்கள். அச்சேற்றி நூல் வடிவாக்க திருவாளர்கள் சே. குணசேகரன், செ.சுப்பையா முதலானவர்கள் உதவியுள்ளார்கள்.

இப்பணி சிறப்பாகவும், வெற்றிகரமாகவும் அமைய மனதார வாழ்த்தி திருவாளர்கள். தெ.ஈஸ்வரன், சி. தனபாலா, சு. சண்முகசுந்தரன், ச.கனகரத்தினம் முதலானோர் நிதியுதவி செய்துள்ளார்கள். இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களப் பணிப்பாளர் திரு. க.சண்முகலிங்கம் அவர்கள் இந்நூல்களை திணைக்களத்தினூடாகப் பெற்று விநியோகிக்க ஏற்பாடுகள் செய்து உதவினார்கள். இவர்கள் அனைவருக்கும் எமது நன்றிகள் உரியதாகும்.

இவை அனைத்திற்கும் மேலாக தோன்றாத் துணையாக பக்க நின்று எம்மை வழிநடத்தும் சற்குரு சித்ரமுத்து அடிகளாரின் அருளாசியும், திருவருளும் துணைநின்று இப்பணியை சிறப்பாக நிறைவேற்றிக் கொடுத்துள்ளது.

இக்கூட்டு முயற்சியில் எமக்கு ஆத்மபலமூட்டி தலைமை தாங்கி வழிநடத்தும் தலைவர் திரு. க. இரவீந்திரன் அவர்களுக்கும், நேரடியாகவும் மறைமுகமாகவும் உதவிய சகலருக்கும் எல்லாம்வல்ல திருவருள் துணை செய்ய பிரார்த்திக்கிறோம். இச் சுவடி நலிந்துவரும் மானுடத்திற்கு நல்லதோர் ஔடதமாக அமையும் என நம்புகிறோம். பெற்றுப் பயன் அடையுங்கள்.

மா. கணபதிப்பிள்ளை
நூல் வெளியீட்டுக் குழுச் செயலர்
தத்துவஞானத் தவச்சாலை



# முகவுரை

இயற்கை ஒரு மாபெரும் தத்துவம். அதைப் புரிந்து கொண்டவனே ஞானி. அவனது அனுபவங்கள்தான் வேதம். இவ்வாறு வரலாறு காணாத காலம் தொட்டு விளங்கி வரும் அனுபவச் சுவடுகளே சமயங்கள். அவை கால தேச வர்த்தமானங்களுக்கு அமைய வேறுபட்டாலும், இயல்பான இயற்கையினின்றும் மாறுபட முடியாது, மாறுபடவுமில்லை.

இவ்வாறு இயற்கையின் நியதியை பிறப்பிலேயே புரிந்துகொண்டவர் ஔவை. இயற்கையோடு ஒன்றி மனுதத்துவத்தின் நெளிவு சுழிவுகளை எல்லாம் ஆண்டு அனுபவித்தவர். ஆண்டி முதல் அரசர் ஈறாக எல்லோராலும் மதிக்கப்பட்டவர். சகல கலைகளையும் அறிந்திருந்தவர்.

மானுடத்தை மனுநெறியில் வாழவைக்க அயராது உழைத்தவர். அதன் பயனாக மனுகுலத்திற்காக அவரால் அருளப்பட்டவையே ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி என்னும் மனுதத்துவச் சுவடிகள்.

**உலகில் எவன் ஒருவன் தனது முப்பதாவது வயதிற்குள் தன்னையும், இயற்கையையும் தன்னுள் உணரத் தவறுகிறானோ அவன் எத்தனை கற்றிருந்தாலும் அவன் நிம்மதியை அனுபவிக்க மாட்டான். தன் அயலவனையும் அமைதியாக வாழ விடமாட்டான்** என்பது அவரது அனுபவ முடிவு. ஆதலால் இந்த மனுதத்துவச் சுவடிகளை விருத்தாப்பியருக்கு அல்லாமல் குழந்தைகளுக்காகவே ஆக்கினார்.

இன்றைய அழியுகத்தில் இருந்து மனுதத்துவத்தை காப்பதற்கு சத்திய சமரச சன்மார்க்கம் ஒன்றே வழி. இதைப் பயிற்ற, பயில, வருங்கால சமூகத்தைக் கட்டிஎழுப்ப, இந்த நூல்கள் பெரிதும் உதவும். இவற்றைக் குழந்தைகள் கற்று வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டும். இதற்கு பெற்றோரும் ஆசிரியப் பெருமக்களும் துணை நிற்கவேண்டும்.

இவ் அறநூல்களை தமது இளம் பராயத்திலேயே ஐயம் திரிபறக் கற்று, கற்றதை வாழ்வில் கடைப்பிடித்து மனுதத்துவத்திற்கு ஓர் உதாரண புருஷராக விளங்கியவர் தவத்திரு கார்த்திகேசு சுவாமிகள். அவரால் அடியேனுக்கு புகட்டப்பட்ட இவ் அறநெறிகளே அடியேனை இன்று ஒரு முழு மனிதனாக வாழவைக்கிறது என்பதே உண்மை. அவர் அடியேனுக்குப் புகட்டிய விளக்கங்களுடன் இந்நூலை அவரது நூற்றாண்டு நினைவாக வெளியிடுகிறோம்.

கொழும்பு அருளொளி நிலையம் இது தொடர்பாக ஒரு போட்டிப் பரீட்சையையும் நடத்துகிறது. மாணவச் செல் வங்களை இப்பரீட்சையில் பங்குபெறச் செய்து அவர்களது நினைவாற்றல், கிரகிக்குமாற்றல், கிரகித்ததை வெளிப் படுத்துமாற்றல் முதலியவற்றை வளர்க்க ஆசிரிய சமூகம் ஒத்துழைக்க வேண்டும்.

வெற்றிபெறும் மாணவ மாணவியருக்கு பதக்கங்கள், பரிசுகள், சான்றிதழ்கள் முதலியன வழங்கப்படவுள்ளன. பங்குபற்றி பயன் அடையுங்கள்.

*கா.சிவகுருநாதன்*
*அமைப்பாளர்*
*தத்துவ ஞானத் தவச்சாலை*



ஔவையார் அருளிய

# ஆத்திசூடி

## கடவுள் வாழ்த்து

**ஆத்தி சூடி அமர்ந்த தேவனை**
**ஏத்தி ஏத்தித் தொழுவோம் யாமே.**

ஆன்மாக்களுக்கு ஞானத்தை அருளி அவற்றுடன் சேர்ந்து அவற்றின் கண்களுக்குப் புலப்படாமல் வீற்றிருக்கும் இறைவனை நாம் புகழ்ந்து போற்றி வணங்குவோம்.

## நூல்

**அறஞ் செய விரும்பு.** 1

*நீ வஞ்சகம் – பொய் – களவு – சூது – சினம் – பொறாமை ஆகிய அறம் இல்லாத செய்கைகளுக்கு இடமளியாது நல்ல அறமான காரியங்களை விரும்பிச் செய்.*

**ஆறுவது சினம்.** 2

*நீ ஆபத்தையும் துன்பத்தையும் விளைவிக்கக்கூடிய கோபத்தை அடக்கு.*

**இயல்வது கரவேல்.** 3

*நீ உன் இயல்பான பண்புகளினின்றும் மாறுபட்டு நடக்காதே.*

**ஈவது விலக்கேல்.** 4

*நீ எவரும் பிறருக்குக் கொடுப்பதை தடுக்காதே.*

**உடையது விளம்பேல்.** 5

நீ உன்னிடம் இருக்கும் குற்றம் குறைகளைச், சொத்துச் சுகங்களைப் பிறர் அறியும்படி கூறாதே.

**ஊக்கமது கைவிடேல்.** 6

நீ எக்கருமத்தைச் செய்யும் போதும் இடையில் ஏற்படும் இடையூறுகளுக்கு அஞ்சி உன் முயற்சியையும் தைரியத்தையும் கைவிட்டுவிடாதே.

**எண் எழுத்து இகழேல்.** 7

நீ எதையும் கணிப்பதற்கு ஆதாரமான எண்ணையும், உணர்த்துவதற்கு ஆதாரமான மொழியையும் தாழ்வாக எண்ணித் தூற்றாதே.

**ஏற்பது இகழ்ச்சி.** 8

நீ பிறரிடம் பிச்சை எடுக்கும் இழிசெயலைச் செய்யாதே.

**ஐயம் இட்டு உண்.** 9

நீ பிச்சை கேட்டு வருபவர்களுக்குப் பசியாற உணவு அளித்து அதன் பின் நீ உணவுகொள்.

**ஒப்புரவு ஒழுகு.** 10

நீ உலக நடைமுறைகளைத் தெரிந்து அதற்கேற்ப நட.

**ஓதுவது ஒழியேல்.** 11

நீ நீதிநூட்களைப் படிக்கின்ற வழக்கத்தை உனது சோம்பேறித்தனத்தால் கைவிட்டு விடாதே.

**ஔவியம் பேசேல்.** 12

நீ பிறரிடத்து கொண்ட பொறாமை காரணமாக அவர் களைத் தூற்றிப் பேசாதே.



**அஃகஞ் சுருக்கேல்.** 13

நீ உணவிற்கு அவசியமான நெல், பயறு, உழுந்து, போன்ற நவ தானியங்களை விளைவிப்பதைக் குறைத்து விடாதே.

**கண்டு ஒன்று சொல்லேல்.** 14

நீ உன் கண்களால் பார்த்ததைத் திரித்து வேறுபாடாகக் கூறாதே.

**ஙப்போல் வளை.** 15

நீ 'ங' என்ற எழுத்து எப்படி உபயோகமற்ற தன் இன எழுத்துக்களையும் தமிழ் நெடுங்கணக்கில் இடம்பெறச் செய்து ஆதரிக்கிறதோ அதுபோல உன்னைச் சார்ந்தவர்களை ஆதரி.

**சனி நீராடு.** 16

நீ சனிக்கிழமை தோறும் எண்ணெய் தேய்த்துக் குளி.

**ஞயம் பட உரை.** 17

நீ பேசும்போது கனிவோடு இன்சொல்லால் பேசு.

**இடம்பட வீடு எடேல்.** 18

நீ தேவைக்கு அதிகமாகப் பெரிதாக வீட்டைக் கட்டாதே.

**இணக்கம் அறிந்து இணங்கு.** 19

நீ ஒருவரிடம் நட்புக்கொள்ளுமுன்; அவர் நட்புக் கொள்ளத் தகுந்தவரா என அறிந்து, அதன்பின் நட்புக் கொள்.

**தந்தை தாய் பேண்.** 20

நீ உன்னை ஈன்ற தாய் தந்தையரை அவர்களுக்கு இயலாத காலத்தில் போற்றி ஆதரித்து வேண்டுவன செய்

**நன்றி மறவேல்.** 21

நீ உனக்கு ஒருவர் செய்த உதவியை எக்காரணம் பற்றியும் மறந்து விடாதே.

**பருவத்தே பயிர் செய்.** 22

நீ செய்யும் கருமங்களைச் செய்ய வேண்டிய காலத்திலே செய்.

**மண் பறித்து உண்ணேல்.** 23

நீ பிறருடைய நிலத்தை வஞ்சகமாக அபகரித்து அந்நிலத்தில் இருந்து வரும் வருவாயில் நீ வாழாதே.

**இயல்பு அலாதன செயேல்.** 24

நீ வழமைக்கு மாறான காரியங்களைச் செய்யாதே.

**அரவம் ஆடேல்** 25

நீ ஆபத்தை விளைவிக்கும் நச்சுப் பாம்போடு விளையாடாதே. ஆபத்தை விளைவிக்கும் செயல்களிலும் ஈடுபடாதே.

**இலவம் பஞ்சில் துயில்** 26

நீ உடல் வெப்பத்தைத் தணிக்கக்கூடிய இலவம் பஞ்சில் தயாரித்த மெத்தையில் நித்திரை செய்.

**வஞ்சகம் பேசேல்.** 27

நீ உள்ளத்தில் ஒன்றை மறைத்து வைத்து வாயளவில் பசப்பி கபடமாகப் பேசாதே.

**அழகு அலாதன செயேல்.** 28

நீ பிறர் இகழத்தக்க கேவலமான காரியங்களைச் செய்யாதே.



**இளமையில் கல்.** 29

நீ சிறு பிராயத்திலேயே அறநெறிகளைக் கற்றுக்கொள்.

**அறனை மறவேல்.** 30

நீ அறமான காரியங்களைச் செய்வதற்குத் தவறாதே.

**அனந்தல் ஆடேல்.** 31

நீ அறிவை மயக்கி துன்பத்தைத் தருகின்ற மதுவை அனுபவிக்க முயலாதே. (அனந்தல் – மயக்கம்)

**கடிவது மற.** 32

நீ பிறர் கோபத்தை உண்டாக்கும் சொற்களைக் கூறினால் அவற்றை அப்பொழுதிலேயே மறந்துவிடு.

**காப்பது விரதம்.** 33

நீ எதிலும் உறுதி தளராதே. (விரதம் – உறுதி)

**கிழமைப் பட வாழ்.** 34

நீ பிறருக்கு பயன்தரும் வகையில் நட்புறவுடன் வாழ்.

**கீழ்மை அகற்று.** 35

நீ கீழ்த்தரமான செய்கைகளையும், தாழ்வு மனப் பான்மையையும் உன் மனத்தினின்றும் நீக்கிவிடு.

**குணமது கைவிடேல்.** 36

நீ எத்தகைய வறுமை, துன்பங்கள் வந்துற்ற போதும் நீ உனது நற்பண்புகளைக் கைவிட்டுவிடாதே.

**கூடிப் பிரியேல்.** 37

நீ நல்ல பண்புள்ளவர்களை அறிந்து தெரிந்து உறவு கொள். பின் எக்காரணம் பற்றியும் அவர்களை விட்டுப் பிரியாதே.

**கெடுப்பது ஒழி.** 38

நீ மற்றவர் வாழ்வைக் கெடுத்து, அவர்களுக்குத் துன்பத்தை விளைவிக்கக்கூடிய தீமையான செயல்களில் ஈடுபடாதே.

**கேள்வி முயல்.** 39

நீ எதையும் ஏன்? எதற்கு? எப்படி? என்று கேட்டு ஆராய்ந்து தெரிந்து தெளிந்து அதன்பின் கைக்கொள்ள முயற்சி செய்.

**கைவினை கரவேல்.** 40

நீ அறிந்த கைத்தொழில்களை வஞ்சனையின்றி மறைக்காது மற்றவர்களுக்கும் கற்றுக்கொடு.

**கொள்ளை விரும்பேல்.** 41

நீ மற்றவர்களுக்குச் சொந்தமான பொருட்களை அவர்கள் மனம் வேதனைப்படும் படியாக அவர்களை வருத்தி அபகரிக்க ஆசைப்படாதே.

**கோதாட்டு ஒழி.** 42

நீ பயனற்றதும், குற்றமுள்ளதும், துன்பத்தைத் தருகின்றதுமான விளையாட்டுகளில் ஈடுபடாதே. ஈடுபட்டு இருந்தால் அதனைக் கைவிட்டுவிடு.

**சக்கர நெறி நில்.** 43

நீ வாழும் நாட்டின் அரசு வகுக்கும் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டு அதற்கு அமைய நட.

**சான்றோர் இனத்திரு.** 44

நீ சொல்லும் செயலும் ஒன்றுபட்ட சான்றோர்களுடைய உறவைப் பெற்று அவர்களுடன் சேர்ந்து இரு.



**சித்திரம் பேசேல்.** 45

நீ அலங்கார வார்த்தைகளால் உண்மையை மறைத்து பொய்யை மெய்போலக் கேட்பவர் நம்பும்படி பேசாதே.

**சீர்மை மறவேல்.** 46

நீ நிலையான புகழைத் தரத்தக்க நற்பண்புகளையும், செயல்களையும் மறந்தும் கைவிடாதே.

**சுளிக்கச் சொல்லேல்.** 47

நீ கேட்போர் அருவருத்து முகத்தைச் சுளிக்கும் படியான; கேவலமான தூசனையான சொற்களை எவரிடம் பேசும் போதும் உபயோகியாதே.

**சூது விரும்பேல்.** 48

நீ மனித வாழ்வைக் கெடுத்து வஞ்சக எண்ணங்களுக்கு இடமளிக்கும் சூதாட்டங்களை விளையாட கனவிலும் கூட ஆசைப்படாதே.

**செய்வன திருந்தச் செய்.** 49

நீ செய்யக் கூடிய நல்ல காரியங்களை எவ்வித குறையும் ஏற்படாத வகையில் திருத்தமாகவும் சிறப்பாகவும் செய்.

**சேரிடம் அறிந்து சேர்.** 50

நீ போய் அடைய வேண்டிய இடத்தை அவ்விடம் பாதுகாப்பானதா ஆபத்தில்லாததா என்பதை அறிந்து தெளிந்தபின் அவ்விடம் சென்றடை.

**சை எனத் திரியேல்.** 51

நீ மற்றவர்கள் இகழும்படியான செயல்களைச் செய்தும், மற்றவர்களை உதாசீனப்படுத்தியும் நடவாதே.

**சொல் சோர்வு படேல்.** 52

நீ பிறருடன் பேசும் போது ஐயமும் மயக்கமுமற்ற தெளிவான வார்த்தைகளில் உன் கருத்துக்களைச் சொல்.

**சோம்பித் திரியேல்.** 53

நீ செய்யவேண்டிய கடமையைச் செய்யவேண்டிய காலத்தில் செய்யாது, பிறகு செய்யலாம் என முயற்சி ஏதும் இன்றி சோம்பலை வளர்த்துச் சுற்றித்திரியாதே.

**தக்கோன் எனத் திரி.** 54

நீ உன் சொல்லாலும் செயலாலும் உன்னை ஒரு உதாரண புருடனாக மற்றவர்கள் கணிக்கும்படியாக நடந்து கொள்.

**தானமது விரும்பு.** 55

நீ ஆதரவற்ற மக்களுக்கு உன்னால் செய்யத்தக்க உதவிகளை விருப்பத்துடன் செய்து அவர்களது துன்பங் களைத் துடை.

**திருமாலுக்கு அடிமை செய்.** 56

நீ வாழும் நாட்டு அரசுக்கு நன்மையும் பெருமையும் தரத்தக்க முறையில் நேர்மையாகத் தொண்டு செய். (திருமால் – அரசன் – அரசு)

**தீவினை அகற்று.** 57

நீ துன்பத்தையும், அகௌரவத்தையும் விளைவிக்கத் தக்க தீய செயல்களைச் செய்வதை விட்டுவிடு.

**துன்பத்திற்கு இடம் கொடேல்** 58

நீ உன் மனமும், பிறர் மனமும் துன்பப்பட இடம் அளிக்காதே.



**தூக்கி வினைசெய்.** 59

நீ எக் காரியத்தையும் நன்கு ஆராய்ந்து தெளிந்து செய்.

**தெய்வம் இகழேல்.** 60

நீ உன் மாதா, பிதா, குருவாகிய தெய்வங்களை எக்காரணம் பற்றியும் இகழ்ந்து பேசாதே.

**தேசத்தோடு ஒத்து வாழ்.** 61

நீ நாட்டு மக்களோடு இணைந்து ஒற்றுமையாக வாழ்.

**தையல் சொல் கேளேல்.** 62

நீ பெண்கள் பேதமையோடு கூறும் வார்த்தைகளைக் கேட்டு அதன்படி நடக்க முற்படாதே.

**தொன்மை மறவேல்.** 63

நீ மூதாதையர் கட்டிக்காத்த நற்பண்புகளை எக் காரணம் கொண்டும் மறவாதே.

**தோற்பன தொடரேல்.** 64

நீ தோல்வியைத் தரத்தக்க செயல்களைத் தெரிந் திருந்தும் அகங்காரம் காரணமாகச் செய்து முடிப்பேன் என்று செய்ய முற்படாதே.

**நன்மை கடைப்பிடி.** 65

நீ நன்மை தரத்தக்க நீதியான நல்லசெயல்களை எத்தகைய இடையூறுகள் வந்தபோதும் உறுதியாகநின்று செய்துமுடி.

**நாடு ஒப்பன செய்.** 66

நீ நாட்டு மக்கள் நல்லவை என ஏற்றுக் கொள்ளும் படியான நற்காரியங்களைத் தயக்கமின்றிச் செய்.

**நிலையில் பிரியேல்.** 67

நீ எக்காரணம் பற்றியும் நடுநிலையாகிய உயர்ந்த நிலையிலிருந்து விலகிப் பக்கச்சார்பாகச் செயல்படும் அநீதியான செயல்களைச் செய்யாதே.

**நீர் விளையாடேல்.** 68

நீ ஆபத்தை விளைவிக்கும் காட்டாற்று வெள்ளத்திலோ ஆழமான நீர் நிலைகளிலோ நீந்தி விளையாடாதே.

**நுண்மை நுகரேல்.** 69

நீ சிற்றுண்டிகளை விருப்பம் காரணமாக உடலுக்கு நோயை உண்டாக்கக் கூடிய வகையில் கண்டகண்ட நேரங்களில் உண்ணாதே.

**நூல் பல கல்.** 70

நீ அறநெறிக்கான நூல்களையும் அறிவு வளர்ச்சிக்கான நூல்களைத் தேடித் தெரிந்து அதிகமாகப் படித்து உன் அறிவை விருத்திசெய்.

**நெற் பயிர் விளை.** 71

நீ நாட்டில் வறுமை நோய் ஏற்படாதபடி முக்கிய உணவாகிய நெல்லை அதிகமாகப் பயிர் செய்து நெல் உற்பத்தியைப் பெருக்கு.

**நேர்பட ஒழுகு.** 72

நீ வாழ்க்கையில் எத்தகைய இன்னல்கள் வந்தாலும் நேர்மையைக் கைவிடாது நீதிநெறி பின்பற்றி வாழப் பழகு.

**நை வினை நணுகேல்.** 73

நீ மற்றவர்களுக்குக் கேட்டை விளைவிக்கக் கூடிய தீய செயல்களில் ஈடுபடாதே.



**நொய்ய உரையேல்.** 74

நீ பிறர் மனம் புண்படும் படியான வார்த்தைகளை உபயோகியாதே.

**நோய்க்கு இடம் கொடேல்.** 75

நீ சுத்த உணவு, நல்லொழுக்கம், நற்சிந்தனைகளைக் கடைப் பிடித்து உடலுக்கு ஏற்படக்கூடிய சகல நோய்களும் அண்டாதவாறு உடலைக் காத்துக்கொள்.

**பழிப்பன பகரேல்.** 76

நீ மற்றவர்களை அழுக்காறு காரணமாகத் தரக்குறைவாகக் கேவலமான வார்த்தைகளால் பேசாதே.

**பாம்பொடு பழகேல்.** 77

நீ கொடிய நஞ்சைக் கொண்டதும் எந்நேரமும் உயிராபத்தை விளைவிக்கக் கூடியதுமான பாம்போடு விளையாடாதே. அது போல நயவஞ்சக எண்ணங் கொண்ட மனிதர் உறவையும் தவிர்த்துக்கொள்.

**பிழைபடச் சொல்லேல்.** 78

நீ கூறுகின்ற கருத்துகள் தவறான பொருளைத் தரத்தக்க சொற்களைப் பயன்படுத்தாதே.

**பீடு பெற நில்.** 79

நீ உன் சொல்லாலும் செயலாலும் பெருமை ஏற்படும் படியாக நட.

**புகழ்ந்தாரைப் போற்றி வாழ்.** 80

நீ உலகம் போற்றிப் புகழும் அறிவுடைய பெரியோர்களை மதித்து, அவர்களின் அறிவுரைகளைக் கேட்டுத் தெளிந்து அதனை வாழ்வில் கடைப்பிடி.

**பூமி திருத்தி உண்.** 81

நீ உண்ண உணவைத் தருகின்ற பூமியை உழுது பண்படுத்தி எருஇட்டு பேணி பயிர்செய்து விளைவைப் பெருக்கி உண்.

**பெரியாரைத் துணைக் கொள்.** 82

நீ அறிவு சார்ந்த ஒழுக்க சீலர்களைத் துணையாகக் கொண்டு ஐயங்களை அவர்களின் அறிவுரைகளைக் கேட்டு தெளிந்து வாழ்க்கையில் கடைப்பிடி.

**பேதைமை அகற்று.** 83

நீ மூடத்தனமான செயல்களையும் சிந்தனைகளையும் அறவே நீக்கிவிடு.

**பையலோடு இணங்கேல்.** 84

நீ அறிவற்ற மிலேச்சருடன் உறவு கொள்ளாதே.

**பொருள் தனைப் போற்றி வாழ்.** 85

நீ வாழ்க்கைக்குத் தேவையான உணவு உடை முதலிய வற்றை வீண்விரயம் ஆக்காது, மிகவும் கவனமாகப் பாது காத்து நிதானமாகச் செலவு செய்து வாழ்.

**போர்த் தொழில் புரியேல்.** 86

நீ சுய நலங்காரணமாகச் சக உயிர்களை வீணே கொன்று குவிக்கும் கொடிய போர்த் தொழிலில் ஈடு படவோ துணை போகவோ செய்யாதே.

**மனம் தடுமாறேல்.** 87

நீ இன்பமோ, துன்பமோ, கஷ்டமோ, நஷ்டமோ எதுவந்த போதும் மனம்கலங்கி, செய்வது அறியாது தடுமாறி நிலை குலையாதே.



**மாற்றானுக்கு இடம் கொடேல்.** 88

நீ உனக்கு முன்பின் தெரியாத அன்னியனுக்குப் பரிதாபப் பட்டு உன் வீட்டில் தங்க இடம் கொடுக்காதே.

**மிகை படச் சொல்லேல்.** 89

நீ உன்னைப்பற்றி மற்றவர்கள் முன் அதிகமாகப் புகழ்ந்து பேசாதே.

**மீதூண் விரும்பேல்.** 90

நீ சுவையான உணவு என்பதற்காக ஆசைப்பட்டு அளவுக்கு அதிகமான உணவை உண்ணாதே.

**முனை முகத்து நில்லேல்.** 91

நீ நிராயுதபாணியாக சண்டை நடக்கும் இடத்தில் தேவையற்றுப் போகாதே.

**மூர்க்கரோடு இணங்கேல்.** 92

நீ பண்பில்லாத தீய முரடர்களுடன் எக்காரண்ங் கொண்டும் நட்புக் கொள்ளாதே.

**மெல்லி நல்லாள் தோள் சேர்.** 93

நீ நற்குணம் பொருந்திய பெண்ணை வாழ்க்கைத் துணைவியாகக்கொண்டு இல்லறம் நடத்து.

**மேன் மக்கள் சொல் கேள்.** 94

நீ மேன்மையான குணம் உடையவர்களுடைய அறிவுரைகளை கேட்டு அதன்படி நட.

**மைவிழியார் மனை அகல்.** 95

நீ கண்ணுக்கு மைதீட்டி கவர்ச்சிகாட்டும் ஒழுக்க மில்லாத பெண்கள் வீட்டுப் பக்கம் போகாதே.

**மொழிவது அற மொழி.** 96

நீ சொல்லக் கூடியதை ஐயம்திரிபற்ற தெளிவான பண்புள்ள நீதி மொழிகளாகச் சொல்.

**மோகத்தை முனி.** 97

நீ அனைத்துப் பொருட்களிலும் எழுகின்ற கட்டுப் பாடற்ற ஆசையை வெறுத்து அடக்க முயற்சி செய்.

**வல்லமை பேசேல்.** 98

நீ உன்னுடைய திறமையை நீயே புகழ்ந்து வீராப்புப் பேசாதே.

**வாது முற்கூறேல்.** 99

நீ வலியச் சென்று எவரையும் வீண் விவாதம் செய்வ தற்கு அழைக்காதே.

**வித்தை விரும்பு.** 100

நீ சகல கலைகளையும் கற்பதற்கு ஆசையோடு முயற்சி செய்.

**வீடு பெற நில்.** 101

நீ முக்தியடைவதற்கான சீரிய வழிகளைக் கடைப் பிடி.

**உத்தமனாய் இரு.** 102

நீ அறநெறி தவறாதவனாக உத்தமன் என உலகம் போற்றும் படியாக வாழ்.

**ஊருடன் கூடிவாழ்.** 103

நீ வாழும் ஊராருடன் ஒற்றுமையாக அவர்கள் நன்மை தீமைகளில் பங்கு கொண்டு இணைந்து வாழ் .



**வெட்டெனப் பேசேல்.** 104

நீ எவரிடமும் வெடுக்கென்று அவர்களது மனம் புண்படும் படியாகப் பேசாதே.

**வேண்டி வினை செயேல்.** 105

நீ வேண்டும் என்றே எவருக்கும் தீமை விளைக்கக்கூடிய செயல்களைச் செய்யாதே.

**வைகறைத் துயில் எழு.** 106

நீ அதிகாலை விடியற் பொழுதில் நித்திரையில் இருந்து விழித்து எழு.

**ஒன்னாரைத் தேறேல்.** 107

நீ உன்னோடு ஒத்து இணைந்து நடக்காதவரை நம்பி எக் காரியத்திலும் இறங்காதே.

**ஓரம் சொல்லேல்.** 108

நீ நியாயசபையில் பட்சபாதமாக எவருக்கும் சாட்சி சொல்லாதே.

ஆத்திசூடி
மூலமும் பொழிப்புரையும்
முற்றும்.

ஔவையார் அருளிய

# கொன்றைவேந்தன்

## கடவுள் வாழ்த்து

**கொன்றை வேந்தன் செல்வன் அடியிணை**
**என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே.**

*கொன்றைப் பூவை அணிந்துள்ள சிவபெருமானுடைய செல்லப் புத்திரனான விநாயகப் பெருமானைஎப்பொழுதும் துதித்துப் போற்றி வணங்குவோம்.*

நூல்

**அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.** 1
*எம்மைப் பெற்று வளர்த்து ஆளாக்கும் எம் தாய் தந்தையரே எமது கண் கண்ட முதற் கடவுள்கள்.*

**ஆலயம் தொழுவது சாலவும் நன்று.** 2
*கோவிலுக்குச் சென்று இறைவனை வணங்குவது மிகவும் நல்ல வழக்கம். அது பல நன்மைகளைத் தரும்.*

**இல் அறம் அல்லது நல் அறம் அன்று.** 3
*மனைவியோடு சேர்ந்து ஒற்றுமையாக நடத்தும் குடும்ப வாழ்வே சிறப்புடைய அறவாழ்வாகும்.*

**ஈயார் தேட்டை தீயார் கொள்வர்.** 4
*ஏழைகளுக்கு உதவாத உலோபிகளின் செல்வத்தைத் தீயவர்கள் அபகரித்துக் கொண்டு போய்விடுவார்கள்*



**உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கு அழகு.** 5
*அளவோடு உண்ணுவதே பெண்களுக்குச் சிறப்பைத் தரும்.*

**ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.** 6
*ஊரவர்களை விரோதித்துக் கொண்டால் கஷ்டம் ஏற்படும் போது உதவியின்றிக் குடும்பத்தோடு அழிந்து விட நேரும்.*

**எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்.** 7
*கணக்கும் மொழியும் கண்களைப் போல் எமக்கு வழி காட்டுவன.*

**ஏவாமக்கள் மூவா மருந்து.** 8
*சொல்லும் முன்பே குறிப்பை உணர்ந்து செய்யும் பிள்ளைகள் மரணத்தை வெல்லக்கூடிய அமுதத்துக்கு இணையானவர்கள்.*

**ஐயம் புகினும் செய்வன செய்.** 9
*வறுமையால் பிச்சை எடுக்க நேர்ந்த போதிலும் எம்மால் இயன்ற நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும்*

**ஒருவனைப் பற்றி ஓரகத்து இரு.** 10
*கொண்ட கணவனோடு சேர்ந்து ஒற்றுமையாய் ஒரே வீட்டில் வாழ்வதே பெண்ணுக்குப் பெருமை தருவது.*

**ஓதலின் நன்றே வேதியர்க்கு ஒழுக்கம்.** 11
*வேதத்தை உபதேசிக்கும் அந்தணர்களுக்கு தாம் கற்றதை மற்றவர்களுக்குப் போதிப்பதை விடக் கற்றவாறு ஒழுகுவதே சிறப்பு.*

**ஔவியம் பேசுதல் ஆக்கத்திற்கு அழிவு.** 12
*ஒருவரிடத்து பொறாமை கொண்டு அவர்களைத் தூற்றுவது எமது முன்னேற்றத்திற்குத் தடையாகி அழிவைத்தரும்.*

**அஃகமும் காசும் சிக்கெனத் தேடு.** 13
*உணவிற்கான தானியத்தையும் பணத்தையும் வீணே செல வாக்காது காத்து வரவேண்டும். அது பஞ்சகாலத்தில் உதவும்.*

**கற்பு எனப்படுவது சொல் திறம்பாமை.** 14
*ஒழுக்கம் என்று போற்றப்படுவது சொன்ன வார்த்தை யினின்றும் மாறுபடாதிருத்தலே.*

**காவல் தானே பாவையர்க்கு அழகு.** 15
*தம்மைத் தாமே காத்துக் கொள்வதே பெண்களுக்குரிய சிறப்பாகும்.*

**கிட்டாதாயின் வெட்டென மற.** 16
*ஆசைப்பட்ட பொருள் கிடைக்காவிடில் அதனையிட்டு வருந் தாது அக்கணமே அவ்வாசையை மறந்து விடுவது சிறப்பாகும்.*

**கீழோர் ஆயினும் தாழ உரை.** 17
*நம்மைவிட ஏழ்மை நிலையில் உள்ளவர்களானாலும் அவர்களிடம் மரியாதையோடு பேசிப் பழகு.*

**குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை.** 18
*பிறருடைய குற்றம் குறைகளை பெரிதுபடுத்தி வருவோமானால் எமக்கு உறவாக எவருமே இருக்க மாட்டார்கள்.*

**கூர்அம்பு ஆயினும் வீரியம் பேசேல்.** 19
*கையிலே மிகக்கூர்மையான ஆயுதம் வைத்திருக்கும் துணிவில் வீண் வம்புக்குப் போய் வீராப்புப் பேசக்கூடாது.*

**கெடுவது செய்யின் விடுவது கருமம்** 20
*ஒருவர் எமக்கு தீங்கு செய்தால் பதிலுக்கு அவருக்குத் தீங்கு செய்யாமல் மன்னித்து விடுவதே சிறந்த செயலாகும்*



**கேட்டில் உறுதி கூட்டும் உடைமை.** 21
*வறுமை வந்து வாட்டினாலும் மனம் தளராமல் நற்பண்பைக் காத்து வந்தால் அது எமக்குச் செல்வத்தைச் சேர்ப்பிக்கும்*

**கைப்பொருள் தன்னில் மெய்ப் பொருள் கல்வி.** 22
*கையில் இருக்கும் அழிந்து போகக்கூடிய செல்வத்தை விட என்றும் அழிக்கமுடியாத உண்மையான செல்வம் கல்வியே.*

**கொற்றவன் அறிதல் உற்ற இடத்து உதவி.** 23
*மக்களுக்குத் துன்பம் உண்டான போது தகுந்த நிவாரணம் அளிப்பது தம் கடமை என ஆட்சிசெய்வோர் உணரவேண்டும்.*

**கோள்செவிக் குறளை காற்றுடன் நெருப்பு.** 24
*பிறரை அவதூறு கூறுவதை விரும்பிக் கேட்பவர் காதிலே மேலும் அவதூறுகளைக் கூறிவிட்டால் காற்றும் நெருப்பும் பற்றி எரிவது போல் ஊர் முழுவதும் பரவிவிடும்*

**கௌவை சொல்லின் எவருக்கும் பகை.** 25
*பிறர் மீது பழிச் சொற்களைக் கூறுவதனால் எல்லோரிடமும் விரோதமே ஏற்படும்.*

**சந்ததிக்கு அழகு வந்தி செய்யாமை** 26
*வம்சவிருத்திக்குச் சிறந்தது கருத்தடை செய்யாது நன்மக்களைப் பெறுதல்.*

**சான்றோர் என்கை ஈன்றோர்க்கு அழகு.** 27
*உலகத்தார் தன் பிள்ளைகளை அறிஞர் என்று போற்று படியாக வளர்த்தெடுப்பதே தாய்க்குச் சிறப்பைத் தருவது.*

**சிவத்தைப் பேணில் தவத்திற்கு அழகு.** 28
*ஆன்மாவைத் தூய்மையாக வைத்திருத்தலே தவத்திற்குச் சிறப்பு*

**சீரைத் தேடின் ஏரைத் தேடு. 29**
*சிறப்பாக வாழ விரும்பினால் உழவுத் தொழிலைக் கைக் கொள்ள வேண்டும்.*

**சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல். 30**
*நன்மையிலும் தீமையிலும் விலகாமல் இருப்பதே உறவுக்குச் சிறப்பு ஆகும்.*

**சூதும் வாதும் வேதனை செய்யும். 31**
வஞ்சக எண்ணங்களும் விதண்டா வாதங்களும் துன்பத்தை விளைவிப்பன.

**செய்தவம் மறந்தால் கைதவம் ஆளும். 32**
*செய்கின்ற தவத்தை எவன் மறந்துவிடுகிறானோ அவனை துன்பம் சூழ்ந்து கொள்ளும்.*

**சேமம் புகினும் யாமத்து உறங்கு. 33**
*தேடக்கிடைக்காத புதையலைத் தேடிப் போன போதிலும் நள்ளிரவு நேரத்தில் சிறிது கண்ணுறங்கு.*

**சை யொத்திருந்தால் ஐயம் இட்டு உண். 34**
*வசதி இருக்குமானல் ஏழைக்கு உணவு அளித்து விட்டு உண்ண வேண்டும்.*

**சொக்கர் என்பவர் அத்தம் பெறுவர். 35**
*தூய்மையான உள்ளமும் பொருளும் உள்ளவரானால் வாழ்வில் சகல இன்பங்களையும் அடைவர்.*

**சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர். 36**
*உழைக்காது சோம்பித்திரிபவர்கள் வறுமையால் துன்புற்று வாடுவார்கள்.*



**தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை. 37**
*பிதா கூறும் அறிவுரைக்கு மிஞ்சிய அறிவுரை வேறு இல்லை.*

**தாயிற் சிறந்த ஒரு கோயிலும் இல்லை. 38**
*பெற்ற தாயை விட வணங்குவதற்கு மேலான கோயில் எதுவுமே இல்லை.*

**திரை கடல் ஓடியும் திரவியம் தேடு. 39**
*கடல்கடந்து சென்றாவது அழிவற்ற மெய்ஞானமாகிய பொக்கிசத்தைத் தேடவேண்டும்.*

**தீராக் கோபம் போராய் முடியும். 40**
*அடங்காத சினம் பெரிய சண்டையில் கொண்டுபோய் அழிவை ஏற்படுத்தி விடும்.*

**துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு. 41**
*துன்பப்படும் பொழுது அதைக்கண்டு வேதனைப்படாத இரக்கமற்ற பெண்கள் வயிற்றில் கட்டி வைத்துள்ள நெருப்புப் போன்று ஆபத்தானவர்கள்.*

**தூற்றும் பெண்டிர் கூற்று எனத் தகும். 42**
*அவதூறுகளையே பேசித் திரியும் பெண்கள் மரணத்தை விளைவிக்கக் கூடிய கொடியவர்கள் ஆவர்.*

**தெய்வம் சீறின் கைதவம் மாளும். 43**
*இறை சாபத்திற்கு ஆளானால் தேடிய புண்ணியங்களும் அழிந்து விடும்.*

**தேடாது அழிக்கின் பாடாய் முடியும். 44**
*முயன்று பொருளைச் சம்பாதிக்காமல் இருக்கின்ற பொருளைச் செலவு செய்து சுகித்திருந்தால் முடிவில் துன்பப்பட [illegible]ரும்.*

**தையும் மாசியும் வையகத்து உறங்கு.** 45
*தை மாசி மாதங்களில் வைக்கோல் வேய்ந்த வீட்டிலே உறங்கினால் கால நிலைக்குத் தகுந்தபடி சுகமாக இருக்கும்.*

**தொழுது ஊண் சுவையின் உழுது ஊண் இனிது.** 46
*ஒருவரிடம் வணங்கி வேலை பார்த்து வயிறு வளர்ப்பதை விட வேளாண்மை செய்து உண்பதே சிறப்புடையதாகும்.*

**தோழனோடும் ஏழைமை பேசேல்.** 47
*நெருங்கிய நண்பனானாலும் எமது வறுமை நிலையை வெளிப்படையாகச் சொல்லக்கூடாது.*

**நல் இணக்கம் அல்லது அல்லல் படுத்தும்.** 48
*நல்லவர்கள் உடனல்லாத கெட்டவர்கள் உடன் கொள்ளும் நட்பு தொல்லைகளை விளைவிக்கும்.*

**நாடு எங்கும் வாழக் கேடு ஒன்றும் இல்லை.** 49
*நாடுமுழுவதும் செழித்துத் தழைத்தால் எவருக்கும் வறுமை எனும் துன்பமே இருக்காது.*

**நிற்கக் கற்றல் சொல் திறம்பாமை.** 50
*கொடுத்த வாக்குறுதியில் வழுவாதிருத்தலே நிலையான கல்வி கற்றதற்கு அழகு.*

**நீரகம் பொருந்திய ஊரகத்திரு.** 51
*குடி தண்ணீர் வசதி நிறைந்த ஊரிலே குடியிருப்பது நன்மை பயப்பது.*

**நுண்ணிய கருமம் எண்ணித் துணி.** 52
*மிகச் சிறிய காரியத்தையும் தீர யோசித்துத் தெளிந்து செய்ய வேண்டும்*



**நூன் முறை தெரிந்து சீலத்து ஒழுகு.** 53
*அறநூல்களின் நீதி முறைகளைத் தெரிந்து அதன்படி ஒழுக்கத்தோடு வாழ வேண்டும்.*

**நெஞ்சை ஒளித்து ஒரு வஞ்சகம் இல்லை.** 54
*தன் மனதுக்குத் தெரியாமல் எவராலும் ஒரு வஞ்சகமான காரியத்தையும் செய்ய இயலாது.*

**நேரா நோன்பு சீர் ஆகாது.** 55
*மனம் ஒன்றிச் செய்யாத விரதங்கள் முறையான பலனை அளிக்காது.*

**நைபவர் எனினும் நொய்ய உரையேல்.** 56
*எளியவரானாலும் மனம் நோகும் படியான சொற்களைக் கூறவேண்டாம்.*

**நொய்யவர் என்பவர் வெய்யவர் ஆவர்.** 57
*தோற்றத்தில் எளிமையாகத் தெரிந்தாலும் செயல்மூலம் பெரியவராகத் திகழவும் கூடும்.*

**நோன்பு என்பது கொன்று தின்னாமை.** 58
*மற்ற உயிர்களைக் கொன்று அதன் புலாலை உண்ணாமல் இருப்பதே உயர்ந்த விரதம்.*

**பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்.** 59
*வேளாண்மை விளைச்சலைக் கொண்டு அவரவருடைய நல்வினைப்பயனைத் தெரிந்துகொள்ளலாம்.*

**பாலோடு ஆயினும் காலம் அறிந்து உண்.** 60
*பாலுடன் கலந்த அமுதானாலும் உண்ணத் தகுந்த நேரம் அறிந்து உண்ண வேண்டும்.*

**பிறன் மனை புகாமை அறம் எனத்தகும்.** 61
*பிறர் மனைவியிடம் இச்சை கொள்ளாது இருத்தலே சிறந்த ஒழுக்க நெறியாகும்.*

**பீரம் பேணில் பாரம் தாங்கும்.** 62
வீரத்தைக் கைப்பிடித்தால் தன் வம்சத்தையே காப்பாற்ற முடியும்.

**புலையும் கொலையும் களவும் தவிர்.** 63
*புலால் உண்ணல், கொலைசெய்தல், திருடுதல் ஆகியவற்றைச் செய்யாது ஒழித்து விடு.*

**பூரியோர்க்கு இல்லை சீரிய ஒழுக்கம்.** 64
*கீழ்த்தரமானவர்களிடம் சிறப்புமிக்க பண்புகளைக் காண இயலாது.*

**பெற்றோர்க்கு இல்லை சுற்றமும் சினமும்.** 65
*மெய் ஞானத்தை அடைந்தவர்களுக்கு உறவு என்னும் பற்றோ கோபமோ இருப்பதில்லை.*

**பேதைமை என்பது மாதர்க்கு அணிகலம்.** 66
*தெரியாதவர்போல் அமைதியாய் இருப்பது பெண்களுக்கு ஆபரணத்தைப் போன்று அழகுசெய்வது.*

**பையச் சென்றால் வையம் தாங்கும்.** 67
*அமைதியாகப் பொறுமையுடன் செய்யும் காரியங்களை உலகு ஏற்று அனுசரித்து நடக்கும்.*

**பொல்லாங்கு என்பவை எல்லாம் தவிர்.** 68
*தீமையான செயல்கள் எல்லாவற்றையும் வாழ்க்கையில் கடைப்பிடியாது அகற்றிவிட வேண்டும்.*



**போனகம் என்பது தான் உழந்து உண்டல்.** 69
*சுய முயற்சியால் சம்பாதித்து உண்ணும் உணவே சிறப்பு உடையது.*

**மருந்தே ஆயினும் விருந்தோடு உண்.** 70
*அமிர்தமே ஆனாலும் மற்றவர்களுக்கும் பகிர்ந்து அளித்து விருந்தினருடன் உண்பதே சிறப்பு.*

**மாரி அல்லது காரியம் இல்லை.** 71
*மழை இல்லாமல் உலகில் எந்த முக்கியமான காரியங்களும் நடைபெறாது.*

**மின்னுக்கு எல்லாம் பின்னுக்கு மழை.** 72
*மின்னல் தோன்றினால் மழை வரப்போகிறது என்பதற்கு அடையாளம் .*

**மீகாமன் இல்லாத மரக்கலம் ஓடாது.** 73
*மாலுமி இல்லாமல் மரக்கப்பல் ஓடாது. இயக்குபவன் இல்லாமல் எதுவும் இயங்காது.*

**முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.** 74
*காலையில் யாருக்கேனும் தீங்கு செய்திடில், மாலையில் அது தனக்கே தீங்காக வந்துசேரும்.*

**மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.** 75
*அறிவுசான்ற பெரியோர்கள் சொல்லும் அனுபவ மொழிகள் அமிர்தம் போன்றவை.*

**மெத்தையில் படுத்தல் நித்திரைக்கு அழகு.** 76
மெத்தையில் படுத்துத் தூங்குவதே அமைதியான தூக்கத்திற்கு வழி.

**மேழிச் செல்வம் கோழை படாது.** 77
*வேளாண்மையால் வந்த செல்வம் என்றும் சிறுமை அடைந்து சிதையாது.*

**மைவிழியார் தம் மனை அகன்று ஒழுகு.** 78
*கண்ணுக்கு மையிட்டு மயக்கும் பொது மகளிரின் வீட்டின் பக்கம் போகாமல் இருப்பது நன்மையாகும்.*

**மொழிவது மறுக்கின் அழிவது கருமம்.** 79
*அனுபவம் உள்ள பெரியவர்கள் கூறும் அறிவுரைகளை மீறிச் செய்யும் காரியங்கள் தோல்வியில் முடியும்.*

**மோனம் என்பது ஞான வரம்பு.** 80
*பேசாமல் இருக்கும் மௌன நிலையே ஞானத்தின் தெளிவைக் கூறும் எல்லை.*

**வளவன் ஆயினும் அளவறிந்து அழித்துண்.** 81
*சோழமன்னனுக்கு இணையான செல்வம் படைத்தவனாயினும் வரவுக்கு ஏற்ற செலவு செய்தல் வேண்டும்.*

**வானம் சுருங்கின் தானம் சுருங்கும்.** 82
*மழையின் அளவு குறைந்து விடுமேயானுல் தானங்களும் குறையத் தொடங்கிவிடும்.*

**விருந்தில்லோர்க் கில்லை பொருந்திய ஒழுக்கம்.** 83
*விருந்தினரை உபசரிக்கும் பண்பு இல்லாதவர்களிடம் இல்லற தர்மம் நிறைவு பெறாது.*

**வீரன் கேண்மை கூர் அம்பாகும்.** 84
*ஒரு வீரனுடைய நட்பு தன்கையிலே கூர்மையான அம்பை வைத்திருப்பது போன்று தைரியம் தருவது.*



**உரவோர் என்கை இரவாது இருத்தல்.** 85
*முற்றறிவு பெற்ற முனிவர்கள் எவரிடமும் சென்று யாசிக்க மாட்டார்கள்.*

**ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு.** 86
*மனம் தளராமல் உறுதியோடு இருப்பது முன்னேற்றத்திற்கு ஏற்ற சிறந்த வழி.*

**வெள்ளைக்கு இல்லை கள்ளச் சிந்தை.** 87
*தூய்மையான மனத்தவருக்கு வஞ்சக நினைப்பு எழுவதில்லை.*

**வேந்தன் சீறின் ஆம் துணை இல்லை.** 88
*அரசின் கோபத்துக்கு ஆளானால் எவருமே துணையாக வரமாட்டார்கள்.*

**வைகல் தோறும் தெய்வம் தொழு.** 89
*வைகறைப் பொழுதில் இறைவனை வணங்குதல் வேண்டும்.*

**ஒத்த இடத்து நித்திரை கொள்.** 90
*சமமான தரையில் படுத்துத் தூங்குவதே நல்லது*

**ஓதாதவர்க்கு இல்லை உணர்வோடு ஒழுக்கம்.** 91
*நீதி நூல்களைப் படிக்காதவர்களுக்கு நல்லொழுக்க அறிவு இருக்காது.*

கொன்றைவேந்தன்
மூலமும் உரையும்
முற்றும்

ஔவையார் அருளிய

# மூதுரை

## கடவுள் வாழ்த்து

**வாக்குண்டாம் நல்ல மனம் உண்டாம் மாமலராள்**
**நோக்குண்டாம் மேனி நுடங்காது - பூக் கொண்டு**
**துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதம்**
**தப்பாமல் சார் வார் தமக்கு.**

வாக்குண்டாம் - சொல்வளம் உண்டாகும்; நல்ல மனம் உண்டாம் - நல்ல சிந்தனை உண்டாகும்; மாமலராள் - தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளின்; நோக்குண்டாம் அருள் பார்வை உண்டாகும்; மேனி நுடங்காது - உடலை நோய் துன்புறுத்தாது; துப்பு ஆர் - பவளம் போல் சிவந்த; திருமேனி -உடலும்; தும்பிக்கையான்-துதிக்கை உடைய விநாயகக் கடவுளின்; பாதம் - திருவடிகளை; பூக்கொண்டு - மலர் கொண்டு; தப்பாமல் - தவறாது ; சார் வார்தமக்கு - வணங்குபவருக்கு.

*தினந்தோறும் மலர் கொண்டு, விநாயகப் பெருமான் திருவடிகளைத் தொழுவோருக்கு, சொல்வளம் உண்டாகும் திருமகள் அருட்பார்வை கிடைக்கும். உடலை நோய் வருத்தாது.*

நூல்

**நன்றி ஒருவருக்குச் செய்தக்கால் அந் நன்றி**
**என்று தருங் கொல் என வேண்டா - நின்று**
**தளரா வளர் தெங்கு தாள் உண்ட நீரைத்**
**தலையாலே தான் தருதலால்.** 1



நின்று - நிலைபெற்று; தளரா - சோர்வு அடையாமல்; வளர் - வளர்ச்சியுற்ற; தெங்கு - தென்னை மரம்; தாள் உண்ட நீரை - அடியில் வேர் மூலம் குடித்த தண்ணீரை; தலையாலே - தலையிலே காய்க்கும் இளநீராக; தான் தருதலால் - அது கொடுப்பது போல்; ஒருவருக்கு - நல்லவர் ஒருவருக்கு; நன்றி செய்தக்கால் - நன்மை செய்தால்; அந் நன்றி - அந்த உதவிக்கு; என்று தருங் கொல் -அவர் எப்பொழுது பதிலுக்கு உதவி புரிவாரோ; என வேண்டா - என்று கருத வேண்டிய தில்லை.

*தென்னை மரத்திற்கு அடியிலே நீர் பாய்ச்சுகிறோம்; சுவையுடைய இளநீர் மேலே காய்க்கிறது; அது போல நற்குண முள்ள ஒருவருக்கு நன்மை செய்தால் நமக்கு நன்மையே உண்டாகும்; பதிலுக்கு உதவியை எதிர் பார்த்து எதையும் செய்ய வேண்டாம்.*

**நல்லார் ஒருவருக்குச் செய்த உபகாரம்**
**கல் மேல் எழுத்துப் போல் காணுமே -அல்லாத**
**ஈரமிலா நெஞ்சத்தாருக்கு ஈந்த உபகாரம்**
**நீர்மேல் எழுத்துக்கு நேர்.** 2

நல்லார் ஒருவருக்கு - நல்ல குணம் உடையவருக்கு; செய்த உபகாரம் - செய்த உதவி; கல்மேல் எழுத்துப் போல் - கல்லிலே செதுக்கிய எழுத்தைப் போல; காணுமே - நிலையாகக் காணப் படும்; அல்லாத - நல்லவர் அல்லாத; ஈரம் இலா நெஞ்சத்தார்க்கு - இரக்கம் இல்லாத மனத்தவருக்கு; ஈந்த உபகாரம் - செய்த உதவியானது; நீர் மேல் எழுத்துக்கு - தண்ணீரிலே எழுதப்பட்ட எழுத்துக்கு; நேர் - சமமாகும்

*நல்லவருக்கு செய்த உதவி, கல்லிலே செதுக்கப்பட்ட து போல் நிலையாக விளங்கும்; இரக்க மற்றவருக்குச் செய்த உதவி நீரிலே எழுதிய எழுத்தை போல் அழிந்து விடும்.*

**இன்னா இளமை வறுமை வந்து எய்தியக் கால்**
**இன்னா அளவில் இனியவும் - இன்னாத**
**நாள் அல்லா நாள் பூத்த நன் மலரும் போலுமே**
**ஆள் இல்லா மங்கைக்கு அழகு. 3**

இளமை - வாலிபத்தில்; வறுமை வந்து எய்தியக்கால் - தரித்திரம் உண்டாகுமானால்; இன்னா - மிகவும் துன்பமாகும் இன்னா அளவில் - துன்பத்தை அளிக்கும் முதுமையில்; இனியவும்- இன்பத்தைத் தரும் பொருட்களை அடைந்தால்; இன்னாத - அதுவும் துன்பத்தை அளிக்கும்; நாள் அல்லா நாள் - காலம் அல்லாத காலத்தில்; பூத்த நல்மலரும் - மலர்ந்த நல்ல மலரும்; ஆள் இல்லா மங்கைக்கு அழகு - கணவன் இல்லாத மங்கையின் அழகையும்; போல்மே - ஒப்பாகும்.

*வாலிபத்தில் வறுமையும் முதுமையில் செல்வமும் உண்டானால் அதனால் துன்பமே விளையும்; இன்பத்தை காண இயலாது; தேவை இல்லாத போது மலரை யார் சூடிக்கொள்வர்? கணவனைப் பெற்றிராத மங்கை என்ன தான் அழகோடு திகழ்ந்தாலும் அதனால் பயன் என்ன?*

**அட்டாலும் பால் சுவையில் குன்றாது அளவளாய்**
**நட்டாலும் நண்பு அல்லார் நண்பு அல்லர்**
**கெட்டாலும் மேன்மக்கள் மேன் மக்களே சங்கு**
**சுட்டாலும் வெண்மை தரும் 4**

பால் - பசுவின் பாலை; அட்டாலும் - காய்ச்சினாலும்; சுவையில் குன்றாது - ருசியில் குறையாது; சங்கு - சங்கை; சுட்டாலும் - சுட்டு நீறாக்கினாலும்; வெண்மை தரும் - வெண்மையாகவே இருக்கும்; மேன்மக்கள் - பண்புஉடையோர்; கெட்டாலும் -வறுமையுற்ற போதிலும்; மேன்மக்களே -பண்பு உள்ளவராகவே விளங்குவர்; நண்பு அல்லார் - நட்பின் பெருமை அறியாதவர்; அளவளாய் நட்டாலும் - நெருங்கிப் பழகினாலும்; நண்பு அல்லர் - நண்பர் ஆகமாட்டார்.

*பாலை எவ்வளவு காய்ச்சினாலும் அதன் சுவை குறையாது; சங்கைச் சுட்டாலும் அதன் நிறம் வெண்மையாகவே காணப்படும். பண்புடைய மேலோர்கள் வறுமையில் வாடிய போதிலும் தங்கள் தகுதியை இழக்க மாட்டார்கள்; பண்பற்றவர் நெருங்கிப் பழகினாலும் நல்ல நண்பர்களாக மாட்டார்கள்.*

**அடுத்து முயன்றாலும் ஆகும் நாள் அன்றி**
**எடுத்த கருமங்கள் ஆகா - தொடுத்த**
**உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்**
**பருவத்தால் அன்றிப் பழா. 5**

தொடுத்த - கிளைகள் உடைய; உருவத்தால் நீண்ட தோற்றத்தில் உயரமான; உயர் மரங்கள் எல்லாம் - நீண்ட உயர்ந்த மரங்கள் அனைத்தும்; பருவத்தால் அன்றி - தகுந்த பருவ காலத்தால் அல்லாமல் ; பழா - பழம் தரமாட்டா; அடுத்து முயன்றாலும் - அடிக்கடி முயற்சி செய்தாலும்; ஆகும் நாள் அன்றி - கைகூடும் காலத்தில் அல்லாமல்; எடுத்த கருமங்கள்- மேற்கொண்ட காரியங்கள்; ஆகா - கைகூடா

*நீண்டு உயர்ந்த மரங்கள் ஆனாலும் தகுந்த பருவ காலத்திலே தான் பழங்களை அளிக்கும்; என்ன தான் அடிக்கடி முயன்ற போதிலும் மேற் கொண்ட காரியங்கள் ஆகும் காலத்திலே தான் கைகூடும்.*

**உற்ற இடத்தில் உயிர் வழங்கும் தன்மையோர்**
**பற்றலரைக் கண்டால் பணிவரோ - கற்றூண்**
**பிளந்து இறுவது அல்லால் பெரும் பாரம் தாங்கின்**
**தளர்ந்து விளையுமோ தான். 6**

கற்றூண் - கருங்கல் தூண்; பெரும் பாரம் - அதிக பளுவை; தாங்கின் - தாங்குமானால்; பிளந்து இறுவது அல்லால் - முறிந்து விடுவதல்லால்; தளர்ந்து வளையுமோ - நெகிழ்ந்து வளையுமோ; அதுபோல், உற்ற இடத்தில் - அவமானப் படும் இடத்தில்; உயிர் வழங்கும் தன்மையோர் - உயிரை விடும் குணமுடையோர்; பற்றலரை - விரோதிகளை; கண்டால் பணிவரோ - பார்த்துத் தாழ்ந்துபோவரோ?

*கருங்கல் தூணான போதிலும் அதிகமான பாரத்தைச் சுமத்தினால் அது முறிந்து உடைவது போல, மானம் உள்ளோர், விரோதிகளைக் கண்டு பயந்து வணங்காமல் உயிரையே விட்டு விடக்கூடிய இயல்புடையவர்கள் ஆவார்கள்.*

**நீர் அளவே ஆகுமாம் நீர் ஆம்பல்; தான் கற்ற**
**நூல்அளவே ஆகுமாம் நுண் அறிவு - மேலைத்**
**தவத்து அளவே ஆகுமாம் தான் பெற்ற செல்வம்**
**குலத்து அளவே ஆகும் குணம்.** 7

நீர் ஆம்பல் -நீரில் வளரும் அல்லி; நீர் அளவே ஆகும் - நீரின் உயரத்திற் கேற்பவளரும்; நுண் அறிவு - கூர்மையான அறிவு; தான் கற்ற - தான் பயின்ற; நூல் அளவே ஆகும் - நூல்களின் தரத்திற்கேற்ப இருக்கும் ; தான் பெற்ற செல்வம் - தான் அடைந்த செல்வம்; மேலை - முற்பிறப்பில் செய்த; தவத் தளவே ஆகும் - நல்வினை அளவே இருக்கும்; குணம் - ஒருவரின் குணமானது; குலத்தளவே ஆகும் - வம்சத்தை ஒட்டியிருக்குமம்.

*அல்லி, தண்ணீரின் அளவுக்கு தகுந்த படி உயர்ந்து வளரும்; ஒருவர் படித்த நூல்களின் தரத்திற்கேற்ப கல்வி அமையும்; செல்வமும் நல்வினையும் ஒட்டியே இருக்கும்; குணமும் குடும்பத்தை அனுசரித்தே காணப்படும்.*



**நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலம்மிக்க**
**நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே - நல்லார்**
**குணங்கள் உரைப்பதுவும் நன்றே; அவரோடு**
**இணங்கி இருப்பதுவும் நன்று.** 8

நல்லாரை - நல்ல குணம் உள்ளவர்களை; காண்பதுவும் - பார்ப்பதுவும்; நன்றே - நன்மையே; நல்லார் - நற்குணம் உள்ள வரது; நலம் மிக்க - நன்மை தரக்கூடிய; சொல் - சொல்லை; கேட்ப தும் நன்றே - கேட்பது நன்மையே; நல்லார் - நற்குணம் உடை யோரது ; குணங்கள் - பண்புகளை ; உரைப்பதுவும் கூறுவதும்; நன்றே -நன்மையே; அவரோடு-அத்தகையவரோடு; இணங்கி இருப்பதுவும் - நெருங்கி இருப்பதுவும்; நன்றே - நன்மையே.

*நல்ல குணம் உள்ளவரைக் காண்பது, அவர் கூறும் வழிகளைக் கேட்பது அவருடைய பண்புகளை எடுத்துச் சொல்வது, அத்தகையவரோடு இணைந்து இருப்பது எல்லாமே நமக்கு நன்மை தரும்.*

**தீயாரைக் காண்பதுவும் தீதே திரு அற்ற**
**தீயார் சொல் கேட்பதுவும் தீதே - தீயார்**
**குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோடு**
**இணங்கி இருப்பதுவும் தீது.** 9

தீயாரை - கெட்ட குணம் உள்ளவரை ; காண்பதுவும் - பார்ப்பதுவும்; தீதே - தீமையே; தீயார் - கெட்டவர்களது; திரு அற்ற - பயன் இல்லாத; சொல் கேட்பதுவும் - சொல்லைக் கேட்பதுவும்; தீதே - தீமையே விளைவிக்கும்; தீயார் கெட்டவர் களுடைய; குணங்கள் - தீய குணங்களை; உரைப்பதுவும் - பேசுவதும்; தீதே - கெடுதலையே உண்டாக்கும்; அவரோடு - அத்தகையாரோடு; இணங்கி இருப்பதுவும் - கூடி இருப் பதுவும்; தீதே - தீமையே ஏற்படுத்தும்.

*கெட்ட குணத்தவரைக் காண்பது, அவருடைய பயனற்ற மொழிகளைக் கேட்பது, அவருடைய கெட்ட குணங்களைப் பேசுவது, அத்தகையாரோடு சேர்ந்து இருப்பது யாவுமே தீமையை உண்டாக்கும்.*

**நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழி ஓடிப்**
**புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம் - தொல் உலகில்**
**நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு**
**எல்லார்க்கும் பெய்யும் மழை.** 10

நெல்லுக்கு -நெல்பயிருக்கு; இறைத்த நீர் - இறைத்த தண்ணீர்; வாய்க்கால் வழி ஓடி - கால் வாய் வழியாகச் சென்று; ஆங்கு -அங்கே; புல்லுக்கும் பொசியும் - புல்லுக்கும் கசிந்து ஊறும்; தொல் உலகில் -இயல்பான உலகில்; நல்லார் ஒருவர் உளரேல் - நல்லவர் ஒருவர் இருந்தால்; அவர் பொருட்டு - அவருக்காக; எல்லார்க்கும் - எல்லோருக்கும்; மழை - மழையானது; பெய்யும் - பொழியும்.

*நெல் பயிருக்கு இறைத்த தண்ணீரானது வாய்க்கால் வழியாகச் சென்று புல்லுக்கும் பயன்படுகிறது; இவ்வுலகில் நல்லவர் ஒருவர் இருக்கும் காரணமாகப் பொழியும் மழை யானது மற்ற அனைவருக்கும் பயன்படுகிறது.*

**பண்டு முளைப்பது அரிசியே ஆனாலும்**
**விண்டு உமிபோனால் முளையாதாம் - கொண்டபேர்**
**ஆற்றல் உடையார்க்கும் ஆகாது அளவு இன்றி**
**ஏற்ற கருமம் செயல்** 11

பண்டு முளைப்பது - உமிக்கு முன்னே முளைப்பது அரிசியே ஆனாலும் - அரிசி ஆனாலும்; உமி விண்டு போனால் - உமியானது நீங்கி விட்டால்; முளையாது - முளைக்காது; கொண்டபேர் ஆற்றல் - மிகுந்த திறமையுடை யோருக்கும்; அளவு இன்றி - துணைஇல்லாமல்; ஏற்ற கருமம் -தொடங்கிய காரியம்; செயல் ஆகாது - செய்து முடியாது.

*அரிசி விளைவதற்கு உமியின் துணை தேவைப்படுகிறது. ஒரு காரியத்தை செய்து முடிக்க, எவ்வளவு திறமை இருந்த போதிலும், தகுந்த ஒருவர் துணை இல்லாமல், தனியாக செய்துவிட முடியாது.*

**மடல் பெரிது தாழை; மகிழ் இனிது கந்தம்**
**உடல் சிறியர் என்று இருக்க வேண்டா - கடல் பெரிது**
**மண்ணீரும் ஆகாது; அதன் அருகே சிற்றூறல்**
**உண்ணீரும் ஆகி விடும்** 12

தாழை மடல் பெரிது - தாழம் பூவின் இதழ் பெரிதாக இருக்கிறது; மகிழ் கந்தம் இனிது - மகிழம்பு (சிறிதானாலும்) மணத்திலே இனியது; கடல் பெரிது - சமுத்திரம் பெரிதாக இருக்கிறது; மண் நீரும் ஆகாது - அதன் தண்ணீர் உடல் அழுக்கைப் போக்குவதற்கு உதவாது; அதன் அருகே சிற்றூறல் - கடற்கரையின் பக்கத்தில் தோண்டக் கூடிய சிறிய ஊற்று நீர்; உண் நீரும் ஆகிவிடும் - குடிப்பதற்கு ஏற்ற தண்ணீர் ஆகும்; உடல் சிறியர் என்று இருக்க வேண்டா - ஒருவருடைய சிறிய உருவத்தைக் கண்டு அவரை அலட்சியமாக எண்ண வேண்டாம்.

*தாழம்பூவின் மடல் பெரிது; ஆனால் அதைவிட மகிழம் பூ சிறிது என்றாலும் மணம் அதிகம்; கடல் பெரிதாக இருந்த போதிலும் அதன் நீர் அழுக்கை போக்கக் கூட உதவாது; அதன் அருகேயுள்ள ஊற்று நீரோ குடிப்பதற்கு உபயோகமாகும். சிறிய உருவமாயிருந்த போதிலும் அவரை மதியாமல் இருக்க வேண்டாம்.*

**கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்**
**அவையல்ல நல்ல மரங்கள் - சபை நடுவே**
**நீட்டு ஓலை வாசியா நின்றான் குறிப்பு அறிய**
**மாட்டாதவன் நன் மரம். 13**

கவை ஆகி கொம்பு ஆகி -கிளை,கொம்புகளுடன்; காட்டு அகத்தே நிற்கும் - காட்டிலே நிற்கின்ற; அவை அல்ல நல்ல மரங்கள் -அந்த மரங்கள் நல்ல மரங்கள் ஆகமாட்டா; சபை நடுவே - கற்றோர் சபையின் மத்தியிலே; நீட்டு ஓலை - காட்டிய ஓலையை; வாசியா நின்றான் - வாசிக்கத் தெரியாது நிற்பவனும்; குறிப்பு அறிய மாட்டாதவன்- பிறருடைய உள்ளக் குறிப்பை உணரா தவனும்; நல்ல மரம் - சிறந்த மரம்.

*கல்வி அறிவுடையோர் சபையிலே ஒருவர் கொடுக்கும் ஓலைச் சுவடியைப் படிக்கத் தெரியாதவனும் பிறருடைய உள்ளக்குறிப்பை உணராமல் நிற்பவனும் கொம்பு கிளை களுடன் காட்டிலே நிற்கின்ற மரத்தைப் போன்றவன்.*

**கான மயில் ஆடக் கண்டிருந்த வான் கோழி**
**தானும் அதுவாகப் பாவித்துத் - தானும் தன்**
**பொல்லாச் சிறகை விரித்து ஆடினால் போலுமே**
**கல்லாதான் கற்ற கவி. 14**

கல்லாதான் - படிக்க வேண்டியவற்றைப் படிக்காதவன்; கற்ற கவி - பிறர் கூறுவதைக்கேட்டு கவி பாடுதல்; கானம் மயில் ஆட - காட்டிலே உள்ள மயில் தோகை விரித்து ஆட; கண்டு இருந்த வான் கோழி - அதைப் பார்த்துக் கொண்டிருந்த வான் கோழியானது; தானும் அதுவாக பாவித்து - தானும் மயில் போல எண்ணிக் கொண்டு; தானும் தன் பொல்லாச் சிறகை விரித்துக் கொண்டு ஆடினாலும் போலும் - தன் னுடைய அழகற்ற சிறகை விரித்து ஆடியது போலாகும்.



*முறையாக கல்வி கற்காமல், கற்றவரைப் போல் பாசாங்கு செய்வது, தோகை விரித்து ஆடும் மயிலைப் பார்த்துத் தானும் மயிலாகக் கருதி வான் கோழி தன்னுடைய சிறகை விரித்து ஆடுவது போலாகும்.*

**வேங்கை வரிப்புலி நோய் தீர்த்த விடகாரி**
**ஆங்கதனுக் காகாரம் ஆனாற்போல்-பாங்கறியாப்**
**புல் அறிவாளருக்குச் செய்த உபகாரம்**
**கல்லின் மேல் இட்ட கலம். 15**

வேங்கை வரிப்புலி நோய் - வரிகளையுடைய வேங்கைப் புலியின்; நோயை தீர்த்த - குணமாக்கிய; விடகாரி -விஷ வைத்தியன் ; ஆங்கு - அப்பொழுதே ; அதனுக்கு - அப் புலிக்கு; ஆகாரம் ஆனால் போல - இரையானால் போல்; பாங்கு அறியா - நன்றி உணர்வில்லாத; புல் அறிவாளருக்கு - அற்பபுத்தியுடையவர்களுக்கு; செய்த உபகாரம் - செய்யப் பட்ட உதவியானது; கல்லின் மேல் இட்ட கலம் - கல்லின் மேலே போட்ட மட்பாண்டம் போல நொறுங்கிச் சிதறி விடும் .

*பாம்பு கடித்து கிடந்த வரிப்புலிக்கு விஷ வைத்தியம் செய்த மருத்துவன் அந்த புலிக்கு இரையானது போல் அற்ப புத்தியுடையவர்களுக்கு உதவி செய்தால், கல்லின் மேல் போட்ட மண்பானை போல் நமக்கே தீமையாய் முடியும்.*

**அடக்கம் உடையோர் அறிவிலர் என்று எண்ணிக்**
**கடக்கக் கருதவும் வேண்டா - மடைத் தலையில்**
**ஓடுமீன் ஓட உறு மீன் வரும் அளவும்**
**வாடியிருக்குமாம் கொக்கு. 16**

கொக்கு - கொக்கானது; மடைத் தலையில் - நீர் ஓடும் மடையிலே ; ஓடும் மீன் ஓட - சிறு மீன் ஓடிக் கொண்டிருக்க;

உறுமீன் - பெரியமீன் ; வரும் அளவும் - வரும் வரையில்; வாடி இருக்கும் - அடங்கியிருக்கும்; (அது போல) அடக்கம் உடையார் - அடங்கி இருப்பவரை; அறிவிலர் - அறிவற்றவர்; என்று எண்ணி - என்று நினைத்து; கடக்க அலட்சியம் செய்வதற்கு; கருதவும் வேண்டா - எண்ண வேண்டியதில்லை

*ஓடையிலே சிறுமீன்கள் ஓடுவதை விட்டு விட்டு, பெரிய மீனாக வருவதைக் கொத்திப் பிடிப்பதற்காக கொக்கு அடங்கி இருக்கும்; அதுபோல, அடக்கமாக இருப்பவர் அறிவற்றவர் என்று அவரை அலட்சியமாக நினைக்க வேண்டாம்.*

**அற்ற குளத்தில் அறுநீர்ப் பறைவை போல்**
**உற்றுழித் தீர்வார் உறவு அல்லர்; அக் குளத்தில்**
**கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே**
**ஒட்டி உறவார் உறவு. 17**

அற்ற குளத்தில் - தண்ணீர் வற்றிய குளத்தில்; அறு-விட்டுச் செல்லுகின்ற; நீர் பறவை போல் - நீரிலே வாழும் பறவைகள் போல்; உற்றுழி - துன்பம் நேரிட்ட பொழுதும்; தீர்வார் - விட்டுச் செல்பவர்; உறவு அல்லர் - உறவினர் ஆகமாட்டார்; கொட்டியும் ஆம்பலும் , நெய்தலும்போலவே - கொட்டி , ஆம்பல், நெய்தல் ஆகியனபோல்; ஒட்டி உறவார் - நீங்காமல் சேர்ந்து இருந்து அனுபவிப்பவரே; உறவு - உறவினர் ஆவார்.

*தண்ணீர் உள்ள குளத்திலே கொட்டி, ஆம்பல், நெய்தல் ஆகியன முளைக்கின்றன; அதிலே நீர்ப்பறவைகளும் வாழ் கின்றன; நீர் வற்றியதும் பறவைகள் எல்லாம் பறந்துவிடு கின்றன; ஆனால் , கொட்டி, ஆம்பல், நெய்தல் மட்டும் வாடிக் கிடக்கின்றன; அதுபோல், வாழ்விலும் தாழ்விலும் நீங்காமல் சேர்ந்து இருப்பவரே உண்மையான உறவினர் ஆவார்.*



**சீரியர் கெட்டாலும் சீரியரே சீரியர் மற்று**
**அல்லாதார் கெட்டால் அங்கு என்னாகும் - சீரிய**
**பொன்னின் குடமுடைந்தால் பொன்னாகும் என்னாகும்**
**மண்ணின் குடம் உடைந்தக் கால். 18**

சீரியர் கெட்டாலும் - சிறப்பு மிக்கவர்கள் தாழ்வுற்றிலும்; சீரியரே - சிறப்பானவர்களே ; மற்று, சீரியர் அல்லாதார் கெட்டால் - பண்பு இல்லாதவர்கள் தாழ்வுற்றால்; அங்கு என் ஆகும் - அப்பொழுது அவருடைய நிலை எப்படி இருக்கும்? சீரிய பொன்னின் குடம் உடைந்தால் - சிறந்த தங்கக் குடம் உடைந்தால்; பொன் ஆகும் - பழையபடி தங்கம் ஆகிவிடும்; மண்ணின் குடம் உடைந்தக்கால் - மண்ணில் செய்த குடம் உடைந்தால்; என்னாகும் - என்ன பயன் உண் டாகும்

*சிறப்புமிக்கவர்கள் வறுமையில் வாடிய போதிலும் அவர்க ளுடைய சிறப்பு குன்றாது; தங்கக் குடம் உடைந்து விடு மானால் மறுபடியும் தங்கமாகி விடும், பண்பற்றவர்கள் கெட்டால் அவர்கள் கதி மட்குடம் உடைந்தவாறு ஆகும்.*

**ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல் நீர்**
**நாழி முகவாது நானாழி - தோழி**
**நிதியும் கணவனும் நேர் படினும் தம் தம்**
**விதியின் பயனே பயன். 19**

ஆழ்கடல் நீர் - ஆழமான கடல் நீரை; ஆழ அமுக்கி முகக் கினும் - நன்றாக அமிழ்த்திமொண்டாலும்; நாழி - ஒருபடி யானது; நால் நாழி முகவாது - நான்கு படி நீரை மொள்ளாது; (அது போல) தோழி- சிநேகிதியே; நிதியும் கணவனும் நேர் படினும் - மிகுந்த பொருளும் தகுந்த கணவனும் பெண் களுக்குக் கிடைத்த போதிலும்; தம்தம்- அவரவர்; விதியின் பயனே பயன் - ஊழ்வினைக்கு ஏற்றவாறே சுகம் அமையும்.

*கடலில் உள்ள நீரை எவ்வளவு தான் அமிழ்த்தி மொண்டாலும் ஒரு படி அளவில் நான்கு படி கொள்ளாது; செல்வமும் கணவனும் ஒரு பெண்ணுக்குக் கிடைத்த போதிலும் அவள் விதிப்படியே தான் வாழ்வு அமையும்.*

**உடன் பிறந்தார் சுற்றத்தார் என்று இருக்க வேண்டா**
**உடன் பிறந்தே கொல்லும் வியாதி - உடன் பிறவா**
**மாமலையில் உள்ள மருந்தே பிணி தீர்க்கும்**
**அம் மருந்து போல் வாரும் உண்டு.** 20

வியாதி -நோயானது; உடன் பிறந்தே கொல்லும் - உடலில் தோன்றியே அதனைக் கொல்லுகின்றது; உடன் பிறந்தார் - கூடப் பிறந்தவர் எல்லோரும்; சுற்றத்தார் என்று இருக்க வேண்டா - நன்மை செய்யும் உறவினர் என்று எண்ணிக் கொண்டிருக்க வேண்டிய தில்லை; உடன் பிறவா -கூடப்பிறவாத; மாமலையில் உள்ள மருந்தே - பெரிய மலையிலுள்ள மூலிகையே; பிணி தீர்க்கும் - நோயை குணமாக்கும்; அம் மருந்து போல் வாரும் உண்டு - அந்த மூலிகையைப் போல உதவக் கூடியவர்களும் ஒரு சிலர் இருப்பார்கள்.

*உடலில் தோன்றிய நோயே அதனைக் கொல்லுகிறது; அதைப் போலவே, கூடப்பிறந்தோர் உதவி புரியும் உறவினர் என எண்ண வேண்டாம்; பெரிய மலையில் உள்ள மூலிகை உயிரைக் காப்பாற்றுவது போல, எவரோ ஒருவர் உதவி செய்யக்கூடும்.*

**இல்லாள் அகத்து இருக்க இல்லாதது ஒன்று இல்லை**
**இல்லாளும் இல்லாளே ஆமாயின் - இல்லாள்**
**வலி கிடந்த மாற்றம் உரைக்குமேல் அவ் இல்**
**புலிகிடந்த தூறாய் விடும்.** 21



இல்லாள் அகத்து இருக்க - நற்குணமான மனைவி வீட்டில் இருந்தால்; இல்லாதது ஒன்று இல்லை - அவ் வீட்டில் இல்லாத பொருள் ஒன்றும் இல்லை; இல்லாளும் இல்லாளே ஆயின் - மனைவி மனைவியாக இல்லாமலோ; இல்லாள் வலிகிடந்த மாற்றம் உரைக்கு மேல் - மனைவி வலிந்து தீச்சொற்கூறி எதிர் பேசினாலோ ; அவ் இல் புலி கிடந்த தூறாய் விடும் - அந்த வீடானது புலி வசித்த குகைபோல் ஆகிவிடும்

*நற்குணம் உள்ள மனைவி ஒரு இல்லத்து வாய்த்து விடுவா ளா னால், அங்கே எந்தக் குறையும் இருக்காது; கொடுமையும் எதிர்த்து வாதாடுவதுமான மனைவி இருப்பாளானால் அந்த இல்லமானது புலி தங்கிய குகைபோல் ஆகும்.*

**எழுதியவாறே காண் இரங்கும் மட நெஞ்சே!**
**கருதியவாறு ஆமோ கருமம் - கருதிப் போய்க்**
**கற்பகத்தைச் சேர்ந்தோருக்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேல்**
**முற்பவத்தில் செய்த வினை.** 22

இரங்கும் மட நெஞ்சே - ஏங்குகின்ற பேதை மனமே; கருதிப் போய்க் கற்பகத்தைச் சேர்ந்தோருக்கு - நிறையப் பெறலாம் என நினைத்து கற்பக விருட்சத்தை அடைந்தோருக்கு; காஞ்சிரங்காய் ஈந்ததேல் - எட்டிக்காய் கிடைத்தது என்றால் ; முற்பவத்தில் செய்தவினை - முன் பிறப்பில் செய்த தீவினை ஆகும்; கருமம் கருதிய வாறு ஆமோ - நினைத்த படி செயல்கள் ஆகுமோ; எழுதியவாறே காண் - எல்லாம் விதிப் படியே ஆகும் என்று உணர்ந்து கொள்வாயாக

*நினைத்த படியே எல்லாம் நடந்து விடுமா? விதிப் படியே தான் எல்லாம் நடக்கும்; கற்பக விருட்சத்தை அடைந்தோருக்கு எட்டிக்காய் கிடைக்குமானால், விதியின் பயனே என்று உணர்ந்து கொள்ள வேண்டும்.*

**கற்பிளவோடு ஒப்பர் கயவர்; கடும் சினத்துப்**
**பொற் பிளவோடு ஒப்பாரும் போல்வாரே—வில் பிடித்து**
**நீர் கிழிய எய்த வடுப் போல மாறுமே**
**சீர் ஒழுகு சான்ரோர் சினம். 23**

கயவர் – கீழ்த்தரமானவர் – கடுஞ்சினத்து – கடுங் கோபத்தால் வேறுபட்டால்; கல்பிளவோடு ஒப்பர் – கல் பிளந்தது போல் பிரிந்து விடுவர்; பொன் பிளவோடு ஒப்பாரும் போல்வார் – தங்கம் பிளந்தாலும் மறுபடியும் இணைந்து விடுவது போல் கூட்டுவித்தால் கூடிவிடுவர்; சீர் ஒழுகு சான்றோர் சினம் – சீலம் பொருந்தியவருடைய கோபம்; வில் பிடித்து நீர் கிழிய எய்த வடுப்போல மாறும் – நீரில் வில்லால் எய்த அம்பு உண்டாக்கிய பிளவு போல் கணமே மாறிவிடும்.

*கீழ்த்தரமானவர்களுடைய கோபமானது கல் பிளப்பது போல் உடைந்து பிரிந்து விடும் தன்மையது; தங்கத்திலே பிளவு உண்டானுல் மீண்டும் இணைந்து விடுவது போல் யாரேனும் கூட்டுவித்தால் கூடி விடும் தன்மையுடையோரும் உள்ளனர். நீரிலே அம்பு எய்தால் அது உடனே மறைவது போல, சான்றோர்களுக்கு ஏற்படும் கோபமானது உடனே மாறிவிடும்.*

**நற்றாமரைக் கயத்தில் நல் அன்னம் சேர்ந்தாற் போல்**
**கற்றாரைக் கற்ருரே காமுறுவர்—கற்பிலா**
**மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்**
**காக்கை உவக்கும் பிணம். 24**

கயத்தில்—குளத்தில் உள்ள; நல் தாமரை— நல்ல தாமரை மலரை; நல் அன்னம் சேர்ந்தாற்போல்—நல்ல அன்னப் பறவை அடைந்தது போல; கற்றாரைக் கற்றாரே காமுறுவர்— கல்வியாளரைக் கல்வியாளரே விரும்பிச் சேர்வர்; முதுகாட்டில் – சுடுகாட்டில் உள்ள; பிணம்—பிணத்தை; காக்கை உகக்கும்—



விரும்பும்; அதுபோல கற்பு இலா மூர்க்கரை— கல்வி அறிவு இல்லாத மூடரை; மூர்க்கர் – மூடரே; முகப்பர் – விரும்புவர்.

*அன்னப் பறவையானது தாமரை உள்ள குளத்தைத் தேடிச் செல்வது போல, அறிஞர் அறிஞரையே தேடிச் செல்வர்; காக்கையானது சுடுகாட்டில் பிணத்தைத் தேடிச் செல்வது போல, அறிவற்றவரை அறிவற்றவரே தேடிச் செல்வர்.*

**நஞ்சு உடைமை தான் அறிந்து நாகம் கரந்து உறையும்**
**அஞ்சாப் புறம் கிடக்கும் நீர்ப் பாம்பு— நெஞ்சில்**
**கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்**
**கரவிலா நெஞ்சத் தவர். 25**

நாகம்-நாக பாம்பு; தான் நஞ்சு உடைமை அறிந்து-தன்னிடம் விஷம் இருப்பதை உணர்ந்து; கரந்து உறையும்—புற்றில் மறைந்து வசிக்கும். நீர்ப்பாம்பு -தண்ணீர் பாம்பு; அஞ்சாப் புறம் கிடக்கும் -பயமின்றி வெளியே கிடக்கும்; அது போல நெஞ்சில் கரவுடையார் – வஞ்சக மனத்தினர்; தம்மைக் கரப்பர் - கபடமாகப் பேசுவர்; கரவிலா நெஞ்சத்தவர் – வஞ்சனையற்றவர்; கரவார் – எதனையும் ஒளித்துப் பேச மாட்டார்.

*விஷம் இல்லாத நீர்ப்பாம்பானது பயமின்றி எங்கும் கிடப்பது போல், வஞ்சனை இல்லாத உள்ளத்தினர் வெளிப் படையாகப் பேசுவர்; விஷத்தோடு கூடிய நாகமானது புற்றில் மறைந்து வசிப்பதுபோல் ,வஞ்சகர் கபடமாகவே பேசுவர்.*

**மன்னனும் மாசு அறக் கற்றோனும் சீர் தூக்கின்**
**மன்னனில் கற்றோன் சிறப்பு உடையன் - மன்னர்க்குத்**
**தன்தேசம் அல்லால் சிறப்பு இல்லை கற்றோர்க்குச்**
**சென்ற இடம் எல்லாம் சிறப்பு. 26**

மன்னனும் – அரசனையும்; மாசு அறக் கற்றோனும் – நன்கு பயின்ற அறிஞனையும்; சீர்தூக்கின் – ஆராய்ந்து பார்த்தால்; மன்னனில் கற்றோன் சிறப்பு உடையன் – அரசனை விட அறிஞனே சிறப்பு மிக்கவன்; மன்னற்கு–அரசனுக்கு; தன் தேசம் அல்லால் – தன் நாட்டைத் தவிர; சிறப்பு இல்லை– மதிப்பு இல்லை. கற்றோர்க்கு – அறிஞர்க்கு; செல்லுமிடம் எல்லாம் சிறப்பு– போகுமிடமெல்லாம் பெருமை உண்டு.

*அரசனையும் அறிஞனையும் ஒப்பிட்டால், அறிஞனே சிறந்தவன் அரசனுக்குத் தன்னுடைய நாட்டிலே மட்டும் கௌரவம்; அறிஞனுக்குப் போகும் இடங்களில் எல்லாம் பெருமை உண்டாகும்.*

**கல்லாத மாந்தர்க்குக் கற்று உணர்ந்தார் சொல் கூற்றம்**
**அல்லாத மாந்தர்க்கு அறம் கூற்றம்–மெல்லிய**
**வாழைக்குத் தானீன்ற காய் கூற்றம் கூற்றமே**
**இல்லிற்கு இசைந்து ஒழுகாப் பெண்** 27

கல்லாத மாந்தர்க்கு -கல்வியறிவு அற்றவர்க்கு; கற்று உணர்ந்தார்சொல் -கற்றறிந்தவருடைய உறுதியான மொழி; கூற்றம் -எமனுகும்; அல்லாத மாந்தர்க்கு – தருமத்தில் விருப்பமற்றவர்க்கு; அறம் – தர்மமே; கூற்றம்– எமனுகும்; மெல்லிய வாழைக்கு – மென்மையான வாழை மரத்துக்கு; தானீன்ற காய் கூற்றம் -அது தள்ளிய குலையே எமனுகும்; இல்லிற்கு இசைந்து ஒழுகாப் பெண் – இல் வாழ்வில் இணங்கி நடவாத மனைவி கணவனுக்கு எமன் ஆவாள்.

*மூடருக்குக் கற்றவர்களுடைய சொல்லும், தீயவர்களுக்கு தருமமும், வாழைக்கு அதன் காயும், கணவனுக்கு பொருத்த மற்ற மனைவியும் எமன் போல துன்பத்தை கொடுக்கும்.*



**சந்தன மென் குறடு தான் தேய்ந்த காலத்தும்**
**கந்தம் குறை படாது; ஆதலால் - தம்தம்**
**தனம் சிறியர் ஆயினும் தார் வேந்தர் கேட்டால்**
**மனம் சிறியர் ஆவரோ மற்று.** 28

மென் சந்தனக் குறடு - மிருதுவான சந்தனக் கட்டையானது; தான் தேய்ந்த காலத்தும் -அது தேய்ந்து போனாலும் கூட; கந்தம் குறைபடாது - மணம் குறையாது; ஆதலால் ஆகையினாலே; தார் வேந்தர் - படைபலம் உள்ள அரசர்; தம் தம் தனம் சிறியர் ஆயினும் - தங்களுடைய செல்வம் குறைவுற்ற போதிலும்; கேட்டால் - வறுமையினால்; மனம் சிறியர் ஆவரோ - தாராள மனத்தை இழந்து விடுவரோ?

*சந்தனக் கட்டையானது எவ்வளவு தேய்ந்த போதிலும் அதன் மணம் குன்றாது; அரசருடைய செல்வமானது குறைந்து, வறுமையுற்ற போதிலும், அவர்களுடைய தாராளத் தன்மை யானது குறைந்து விடாது*

**மருவு இனிய சுற்றமும் வான் பொருளும் நல்ல**
**உருவும் உயர் குலமும் எல்லாம் - திரு மடந்தை**
**ஆம் போது அவளோடும் ஆகும்: அவள் பிரிந்து**
**போம் போது அவளோடும் போம்.** 29

மருவு இனிய சுற்றமும் - தழுவி வாழக்கூடிய இனிய உறவினரும்; வான் பொருளும் - பெருமையுடைய செல்வமும்; நல்ல உருவும் - அழகான தோற்றமும்; உயர் குலமும் எல்லாம் - உயர்வான குலம் இவை அனைத்தும்; திரு மடந்தை ஆம் போது - திருமகள் வந்து சேரும் பொழுது; அவளுடன் வந்து சேர்ந்து விடும்; அவள் பிரிந்து போம் போது - அவள் நீங்கிச் செல்லும் பொழுது; அவளோடு போம் -அவளுடனே சென்று விடும்

*சூழ்ந்து வாழும் உறவினர், அடைந்துள்ள செல்வம், அழகான தோற்றம் யாவும் லட்சுமி தேவியின் அருள் இருந்தால் கைகூடும்; அவள்அருள் நீங்கும்பொழுது எல்லாம் போய் விடும்.*

**சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாம் அவரை**
**ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர் - மாந்தர்**
**குறைக்கும் தனையும் குளிர் நிழலைத் தந்து**
**மறைக்குமாம் கண்டீர் மரம்.** 30

மரம் - மரமானது; மாந்தர் குறைக்கும் தனையும் - மனிதர் வெட்டு கின்ற வரையும்; குளிர் நிழலைத் தந்து மறைக்கும் - குளிர்ச்சியான நிழலைக் கொடுத்து வெயிலை மறைக்கும்; அதுபோல, அறிவுடையோர் - சான்றோர்; சாம்தனையும் - தாம் சாகும் வரை; தீயனவே செய்திடினும் - தமக்கு, பிறர் தீமைகளைச் செய்த போதினும்; தாம் அவரை ஆம் தனையும் காப்பர் - தம்மால் இயன்றவரை அவரைக் காத்திடுவார்.

*மரத்தை வெட்டுகின்ற வரை அது வெயிலை மறைத்து குளிர்ந்த நிழலைத் தருவது போல் தாம் சாகும் வரை தமக்கு பிறர் தீமை புரிந்த போதிலும் சான்றோர் இயன்றவரை அவரைக் காப்பாற்றுவர்.*

மூதுரை
மூலமும் உரையும்
முற்றும்



ஔவையார் அருளிய

# நல்வழி

## கடவுள் வாழ்த்து

**பாலும் தெளி தேனும் பாகும் பருப்பும் இவை**
**நாலும் கலந்து உனக்கு நான் தருவேன்–கோலம்செய்**
**துங்கக் கரி முகத்துத் தூமணியே நீ எனக்குச்**
**சங்கத் தமிழ் மூன்றும் தா.**

கோலம் செய் – அழகு தரும்; துங்க – உயர்ந்த; கரிமுகத்து – யானை முகத்தை உடைய; தூமணியே – தூய மாணிக்க விநாயகக் கடவுளே; பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும்– பாலும், தேனும்,வெல்லப்பாகும், பருப்பும் ஆகிய; இவை நாலும் – நான்கையும்; கலந்து– ஒன்றாக்கி; நான் உனக்குத் தருவேன் – நான் உனக்கு நிவேதனம் செய்வேன்; சங்கத் தமிழ் மூன்றும் – சங்கம் வளர்த்த முத்தமிழையும்; நீ எனக்குத் தா – நீ எனக்கு கொடுத்து அருள்வாயாக.

*விநாயகக் கடவுளே அடியேன் படைக்கின்ற பால், தேன்,பாகு, பருப்பு முதலியவற்றை ஏற்றுக் கொண்டு; இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ்ச் செல்வங்களையும் எனக்கு அருள்வீர்.*

நூல்

**புண்ணியம் ஆம் பாவம் போம் போனனாள் செய்த அவை**
**மண்ணில் பிறந்தார்க்கு வைத்த பொருள் – எண்ணுங்கால்**
**ஈது ஒழிய வேறில்லை; எச்சமயத்தோர் சொல்லும்**
**தீது ஒழிய நன்மை செயல்.** 1

புண்ணியம் ஆம் – புண்ணியம் செய்வது ஆக்கம் தரும்; பாவம் போம் – பாவம் அழிவைத் தரும்; போன நாள் – முற்பிறப்பில் – செய்த அவை – செய்த புண்ணிய பாவங்களே; மண்ணில் பிறந்தார்க்கு – பூமியிலே பிறந்தவர்க்கு; வைத்த பொருள் – தேடிவைத்த பொருளாகும்; எண்ணுங்கால் – யோசித்துப்பார்த்தால்; எச்சமயத்தோர் சொல்லும் – எந்த சமயத்தவர் சொல்வதும்; ஈது ஒழிய வேறில்லை –இதுவன்றி வேறு எதுவுமில்லை; (ஆகவே) தீது ஒழிய – தீமை செய்வதை விட்டுவிட்டு; நல்லதைச் செய்க.

*எல்லாச் சமயங்களும் புண்ணியத்தால் இன்பமும் பாவத்தால் துன்பமும் உண்டாகும் என்பதையே சொல்கின்றன. எனவே பாவத்தை ஒழித்து புண்ணியத்தை செய்ய வேண்டும். இதுவே நாம் தேட வேண்டிய செல்வம்.*

**சாதி இரண்டு ஒழிய வேறு இல்லை சாற்றுங்கால்**
**நீதி வழுவா நெறி முறையின் – மேதினியில்**
**இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத் தோர்**
**பட்டாங்கில் உள்ளபடி.** 2

பட்டாங்கில் உள்ளபடி – அறநெறி நூல்களில் கூறப்பட்டுள்ளவாறு; சாற்றுங்கால் – சொல்லப்போனால்; மேதினியில் – பூமியில்; சாதி இரண்டு ஒழிய – இரண்டு வித சாதியே அன்றி வேறு எதுவும் இல்லை. நீதி வழுவா நெறி முறையில் – நீதி தவறாத ஒழுக்க நெறியின்படி; இட்டார் – பிறருக்கு உதவியவர்கள்; பெரியோர் – உயர்குலத்தவர்; இடாதார் – பிறருக்கு உதவாதவர்கள் ; இழிகுலத்தோர் – தாழ்ந்த குலத்தவர் ஆவர்.

*தருமம் செய்பவர் உயர் குலத்தவர், தருமம் செய்யாதவர் தாழ்ந்த குலத்தவர் என்று உலகத்திலே சாதிகள் இரண்டே தான். இவற்றைவிட வேறுசாதிகள் ஏதும் கிடையாது.*



**இடும்பைக்கு இடும்பை இயல் உடம்பு இதன்றே**
**இடும் பொய்யை மெய் என்றிராதே – இடும்கடுக**
**உண்டாயின் உண்டாம் ஊழிற் பெருவலி நோய்**
**விண்டாரைக் கொண்டாடும் வீடு.** 3

இயல் உடம்பு – இயங்குகின்ற இந்த உடம்பு; இடும்பைக்கு – துன்பச் சரக்குகளை; இடும்பை அன்றே – போட்டு வைக்கும் பை அல்லவா; இடும் – உணவினை இடுகின்ற; பொய்யை – பொய்யான இவ்வுடலை ; மெய் என்று இராதே – நிலையானது என்று நினைக்காதே; கடுக – விரைவாக ; இடுக– வந்தாருக்கு வழங்குக; உண்டாயின் – இவ்வழக்கம் உண்டானால் ; ஊழிற் பெருவலிநோய் – பந்தபாசங்களை எல்லாம்; விண்டாரை – நீக்கியவரை; கொண்டாடும் – வரவேற்றுக் கொண்டாடும்; வீடு– முத்தி; உண்டாகும்– உங்களுக்கு கிடைக்கும்.

*இவ்வுடல் நிலையானது என்றெண்ணாது விரைவில் தருமம் செய்ய வேண்டும்; தருமம் செய்பவர்க்குத்தான் முத்தி உண்டு.*

**எண்ணி ஒரு கருமம் யார்க்கும் செய் ஒண்ணாது**
**புண்ணியம் வந்து எய்தும் போதல்லால் - கண்ணில்லான்**
**மாங்காய் விழ எறிந்த மாத்திரைக் கோல் ஒக்குமே**
**ஆங்காலம் ஆகும் அவர்க்கு.** 4

புண்ணியம் வந்து எய்தும் போதல்லால் - நல்வினைப் பயன் கைகூடும் போதல்லாமல்; எண்ணி ஒரு கருமம் யார்க்கும் செய் ஒண்ணாது - எவராலும் எந்த ஒரு கருமத்தையும் திட்டமிட்டுச் செய்ய முடியாது. கண்ணில்லான் - குருடன்; மாங்காய் விழ - மாங்காய் விழுவதற்கு; எறிந்த மாத்திரைக் கோல் ஒக்குமே - முழக்கோலை வீசியது போல **ஆங்காலம் ஆகும் அவர்க்கு** - அமைய வேண்டிய காலம் வந்தால் (குறிப்பற்ற முயற்சியும் ) அவர்க்கு பலனைத் தரும்.

*கண் தெரியாத குருடன் ஒருவன் மாங்காய்க்கு முழக் கோலை வீச மாங்காயும் விழுந்தது போல ஆகவேண்டிய காலமிருந்தால் திட்டமிடாத முயற்சியும் பலனைத் தரும். போதாத காலத்திலே திட்டமிட்டு என்ன முயற்சிகளைச் செய்தாலும் காரியங்கள் கை கூடாது.*

**வருந்தி அழைத்தாலும் வாராத வாரா**
**பொருந்துவன போமின் என்றால் போகா – இருந்து ஏங்கி**
**நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தாம் நினைந்து**
**துஞ்சுவதே மாந்தர் தொழில். 5**

வருந்தி - *கஸ்டப்பட்டு; அழைத்தாலும் - கூப்பிட்டாலும்; வாராத - நமக்கு கிடைக்கக் கூடாதவை; வாரா – கிடைக்க மாட்டா; பொருந்துவன – நமக்கு சேர வேண்டியவை; போமின் என்றால் – வேண்டா மென்றாலும் ; போகா – விட்டு நீங்காது; இருந்தும் – இப்படியாக இருந்தபோதும் ; ஏங்கி – ஏக்கமுற்று வருந்தி; நெஞ்சம் புண்ணாகி – மனம் நொந்து ; நெடுந்தூரம் தாம் நினைந்து – நீண்ட நாட்களுக்கு அதை நினைத்து ; துஞ்சுவதே – சோர்ந்து போவதே ; மாந்தர் தொழில் – மக்களின் செயலாகிவிட்டது.*

*நாம் ஆசைப்படுவன எல்லாம் கிடைத்து விடவும் மாட்டாது; அதுபோல எமது விதிப் பயன் படி வருவதை வேண்டாம் என்று விலக்கி தடுக்கவும் முடியாது. இவ் வுண் மையை உணராது தாம் நினைத்தவை கைகூடவில்லையே என மனம் சோர்ந்து கலங்குவதே மனிதர் இயல்பாகி விட்டது.*

**உள்ளது ஒழிய ஒருவருக்கு ஒருவர் சுகம்**
**கொள்ளக் கிடையாக் குவலயத்தில் –வெள்ளக்**
**கடல் ஓடி மீண்டு கரை யேறினால் என்**
**உடலோடு வாழும் உயிர்க்கு. 6**



உடலோடு வாழும் உயிர்க்கு - உயிர் வாழும் மனிதருக்கு; உள்ளது ஒழிய ஒருவருக்கு - அவரவர்க்கு அமைக்கப்பட்ட தல்லாது; ஒருவர் சுகம் கொள்ளக் கிடையா - ஒருவர் பலனை அனுபவிக்க முடியாது; குவலயத்தில் - இவ்வுலகிலே; வெள்ளக் கடல் ஓடி மீண்டு கரை யேறினால் என் -கடல் கடந்து சென்று பொருள் தேடிவந்தாலும் என்ன பயன்.

*திரைகடல் ஓடித் திரவியத்தை தேடினாலும் அதை அனு பவிப்பதற்கு அவரவர்க்கு பொசிப்பு இல்லாவிட்டால் அவர் அப்பலனை அடைய முடியாது.*

**எல்லாப் படியாலும் எண்ணினால் இவ்வுடம்பு**
**பொல்லாப் புழுமலி நோய்ப் புன்குரம்பை – நல்லார்**
**அறிந்திருப்பார் ஆதலினால் ஆங் கமல நீர் போல்**
**பிரிந்திருப்பார் பேசார் பிறர்க்கு. 7**

எல்லாப்படியாலும் – எல்லா வகையாலும்; எண்ணினால் – எண்ணிப்பார்த்தால் ; இவ்வுடம்பு – இந்த உடம்பானது ; பொல்லா – கொடிய; புழுமலி நோய் – நுண்கிருமிகள் பரவி ஏற்படும் நோய்களுக்கு ; புன் குரம்பை – இருப்பிடமாகி துன்பத்தை தருவது; நல்லார் அறிந்திருப்பார் – அறிவுடைய நல்லவர்கள் இவ் உண்மையை அறிந்திருப்பார்கள் ; ஆதலி னால் – ஆனபடியால்; ஆங்கு – உலகில் ; கமல நீர் போல் – தாமரை இலைத் தண்ணீர் போன்று; பிரிந்திருப்பார் – உடற் பற்று இன்றி இருப்பர்; பேசார் பிறர்க்கு – அறியாமையோடு கூடிய மக்களுக்கு இதைப்பற்றி பிரலாபிக்க மாட்டார்கள்.

*துன்பத்தைத் தருவதும் நோய்களுக்கு இருப்பிடமுமான இவ் உடம்பின் இயல்பை நன்கறிந்த ஞானியர் தாமரை இலைத் தண்ணீர் போல அவ்வுடலில் வாழ்ந்தாலும் அதனிடத்தே பற்று அற்றவர்களாக வாழ்வர்.*

**ஈட்டும் பொருள் முயற்சி எண்ணிறந்த ஆயினும் ஊழ்**
**கூட்டும் படி யன்றிக் கூடாவாம் – தேட்டம்**
**மரியாதை காணும் மகிதலத்தீர் கேண்மின்**
**தரியாது காணும் தனம். 8**

மகிதலத்தீர் – உலகின் கண் வாழும் மக்களே; கேண்மின் – கேட்டுக்கொள்ளுங்கள் ; முயற்சி எண்ணிறந்த ஆயினும் – எவ்வளவுதான் முயன்றாலும் ; ஊழ் கூட்டும்படி அன்றி – விதிப்படி அடையக்கூடிய நல்லகாலம் இருந்தாலன்றி; ஈட்டும் பொருள் – தேடும் செல்வங்கள்; கூடாவாம் – அடைய முடியாது. தரியாது காணும் தனம் – நல்லகாலம் இல்லா விட்டால் தேடிய செல்வங்களும் நிலைக்கமாட்டாது. தேட்டம் – தேடத்தக்கது ; மரியாதை காணும் – ஒழுக்கம் ஒன்றே.

*பொருளைத் தேடுவதற்கு எத்துணை முயற்சி செய்தாலும் நல்ல காலம் இல்லாவிட்டால் அவை கைகூடா. அதுபோல நல்ல காலம் இல்லாவிட்டால் தேடிய பொருளும் நிலைக் காது. ஆகவே நாம் என்றும் நிலைக்கக் கூடிய ஒழுக்கத்தையே பொருளாகத் தேடவேண்டும்.*

**ஆற்றுப்பெருக்கு அற்று அடிசுடும் அந்நாளும் அவ்வாறு**
**ஊற்றுப் பெருக்கால் உலகு ஊட்டும் – ஏற்றவர்க்கு**
**நல்ல குடிப் பிறந்தார் நல் கூர்ந்தார் ஆனாலும்**
**இல்லை என மாட்டார் இசைந்து. 9**

ஆற்றுப் பெருக்கு அற்று – ஆற்றிலே வெள்ளம் வற்றி வறண்டு போய் ; அடி சுடும் அந்நாளும் – நடப்பவருடைய கால்கள் வெப்பம் தாங்க முடியாதவாறு சுடுகின்ற காலத் திலும்; ஊற்றுப் பெருக்கால் – தன் அடி ஊற்றால் உலகிற்கு நீரைக் கொடுக்கும். அவ்வாறு –அதுபோல ; நல்ல குடிப்



பிறந்தோர் – ஒழுக்கம் உள்ள உயர் குடியில் பிறந்தவர்கள்; நல்கூர்ந்தார் ஆனாலும் – வறுமை அடைந்தார்கள் ஆனாலும்; ஏற்றவர்க்கு – தம்மிடம் பிச்சை கேட்டு வந்தவர்களுக்கு ; இல்லை என மாட்டார் – இல்லை என்று சொல்ல மாட்டார்கள்.

*ஆற்றிலே வெள்ளம் வற்றி வறண்ட காலத்திலும் தன் அடி ஊற்றால் உலகிற்கு நீரைக் கொடுத்து உதவுவது போல ஒழுக்கம் உள்ள உயர் குடியில் பிறந்தவர்கள் வறுமை அடைந்த காலத்திலும் தம்மிடம் பிச்சை கேட்டு வருபவர் களுக்கு இல்லை என்று சொல்லாது இயன்ற உதவியை செய்வார்கள்.*

**ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்**
**மாண்டார் வருவரோ மாநிலத்தீர் - வேண்டாம்**
**நமக்கும் அது வழியே நாம் போம் அளவும்**
**நமக்கு என் என்று இட்டு உண்டு இரும். 10**

மாநிலத்தீர் –மானில மக்களே; ஆண்டாண்டு தோறும் – வருடக்கணக்காக ; அழுது புரண்டாலும் – புரண்டு அழு தாலும்; மாண்டார் வருவரோ -இறந்தவர்கள் மீண்டும் வரு வார்களா; வேண்டாம் - வருந்த வேண்டாம்; நமக்கும் அது வழியே – எமக்கும் அதுவே வழி ; நாம் போம் அளவும் – நாம் இறக்கும் வரை; நமக்கு என் என்று –நமக்கு என தொடர்பு இருக்கும் என்று எண்ணி; இட்டு உண்டு இரும் – மற்றவர்களுக்கும் கொடுத்து உண்டு சந்தோசமாக இருப்பீர்.

*இறந்தவர்களை நினைந்து நினைந்து அழுது பிரலாபிப் பதால் இறந்தவர் திரும்பி வரப்போவதில்லை. நாமும் ஒரு நாள் அவரைப் போல இறந்து போவோம் என்பதை உணர்ந்து உலகில் வாழும் நாட்களில் மற்றவர்களுக்கு அன்னமிட்டு நாமும் உண்டு மகிழ்ச்சியாக இருப்பதே அறிவுடமை.*

**ஒருநாள் உணவை ஒழி என்றால் ஒழியாய்**
**இருநாளுக்கு ஏல் என்றால் ஏலாய் - ஒரு நாளும்**
**என் நோவு அறியாய் இடும்பை கூர் என் வயிறே**
**உன்னோடு வாழ்தல் அறிது.** 11

இடும்பை கூர் என் வயிறே - மிகுந்த துன்பத்தைத் தருகின்ற என்னுடைய வயிறே; ஒரு நாள் உணவை - ஒரு நாளுக்குத் தேவையான உணவை; ஒழி என்றால் ஒழியாய் - விட்டுவிடு என்றால் விடமாட்டாய்; இருநாளுக்கு ஏல் என்றால் - இருநாளுக்கு தேவையான உணவை இன்றே எடுத்துக்கொள் என்றால்; ஏலாய் - ஏற்கமறுக்கிறாய் ; ஒரு நாளும் - ஒரு நாளாவது; என் நோவு அறியாய் - என்னுடைய துன்பத்தை அறியமாட்டாய்; உன்னோடு வாழ்தல் அரிது- உன்னுடன் வாழ்வது கஸ்டம்.

*தேவையான உணவை விடவும் மாட்டாது மேலதிகமாக ஏற்கவும் மாட்டாது துன்பத்தை தருகின்ற வயிற்றை சாந்தப் படுத்துவதே மிகக் கஸ்டமானது.*

**ஆற்றங் கரையின் மரமும் அரசு அறிய**
**வீற்றிருந்த வாழ்வும் விழும் அன்றே – ஏற்றம்**
**உழுது உண்டு வாழ்வதற்கு ஒப்பு இல்லைக் கண்டீர்**
**பழுது உண்டு வேறு ஓர் பணிக்கு.** 12

*ஆற்றங் கரையின் மரமும் – ஆற்றின் கரையில் உள்ள மரமும்; அரசு அறிய வீற்றிருந்த வாழ்வும் – அரசன் அறிய வாழ்ந்த வாழ்வும்; விழும்அன்றே –அழியும் ஆதலால் ஏற்றம் – உயர்வு தருவது; உழுது உண்டு வாழ்வது – பயிர் செய்து வாழ்வதே; அதற்கு ஒப்பு இல்லை கண்டீர் – அதற்கு ஒப்பான வாழ்வு இல்லை என அறிவீர்; பழுது உண்டு வேறு ஓர் பணிக்கு – மற்ற தொழில்களுக்கு வீழ்ச்சி உண்டு.*



*உழுது பயிர்செய்யும் தொழிலுக்கு வீழ்ச்சி இல்லை மற்ற எந்த தொழிலுக்கும் வீழ்ச்சி எற்படலாம். ஆதலால் ஒப்பற்ற உயரிய வாழ்க்கை உழவே.*

**ஆவாரை யாரே அழிப்பார் அது அன்றிச்**
**சாவாரை யாரே தவிர்ப்பவர் – ஓவாமல்**
**ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்?**
**மெய் அம்புவி அதன் மேல்** 13

அம்புவி அதன் மேல் – அழகிய பூமியிலே; மெய் – உண்மையாக; ஆவாரை அழிப்பார் யாரே – வாழ்வதற்கு விதிக்கப்பட்டவரை அழிப்பவர் எவர்?; அது அன்றிச் – அது அல்லாமல்; சாவாரை – இறப்பவரை; யாரே தவிர்ப்பவர் – தவிர்ப்பவர் யார்? ஓவாமல் – ஓயாது; ஐயம் புகுவாரை – பிச்சை எடுப்பவரை; யாரே விலக்குவர் – யார் தடுப்பவர்?

*விதி வசத்தால் நன்மை அடைபவரை எவராலும் தடுக்க முடியாது. அது போல மரணத்தை தவிர்க்கவும் முடியாது. பிறரிடம் பிச்சையெடுத்து வாழப்பழகியவரை திருத்த எவராலும் இயலாது என்பது மறுக்க முடியாத உண்மை..*

**பிச்சைக்கு மூத்த குடி வாழ்க்கை பேசுங்கால்**
**இச்சை பல சொல்லி இடித்து உண்கை – சிச்சீ**
**வயிறு வளர்க்கைக்கு மானம் அழியாது**
**உயிர் விடுகை சால உறும்.** 14

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை – பிச்சை எடுப்பதை விட மிக இழிந்த வாழ்க்கை; இச்சை பல சொல்லி இடித்து – ஆசை வார்த்தை பல கூறி ஏமாற்றி ; உண்கை - உண்பது ; பேசுங்கால் – சொல்வதானால்; சிச்சீ – சீ ; வயிறு வளர்க்கைக்கு – இவ்விதம் வயிறு வளர்ப்பதைவிட; மானம் அழியாது –

மானம் கெடாமல்; உயிர் விடுகை – உயிர் விடுவது; சால உறும் – மிக நல்லது.

*ஆசை வார்த்தைகள் பேசி பிறரை ஏமாற்றி உண்டு வாழ்வது பிச்சை எடுப்பதை விடக் கேவலமானது. இப்படி வாழ்வதை விட மானமழியாது சாவது மேல்.*

**சிவாய நம என்று சிந்தித்து இருப்போர்க்கு**
**அபாயம் ஒருநாளும் இல்லை – உபாயம்**
**இதுவே மதியாகும் அல்லாத எல்லாம்**
**விதியே மதியாய் விடும்.** 15

*சிவாய நம என்று – சிவாய நம என்று; சிந்தித்து இருப் போர்க்கு – தியானித்து இருப்பவர்க்கு; அபாயம் ஒரு நாளும் இல்லை – ஒரு போதும் ஆபத்து இல்லை; இதுவே உபாயம் – இதுவே துன்பத்தை வெல்லும் வழி; மதியாகும் – புத்திசாலித் தனம் எனக்கருதும் ; அல்லாத எல்லாம் – மற்றவை எல்லாம்; விதியே மதி ஆய்விடும் – விதிவழி செல்லும் அறிவாகும்.*

*மூல மந்திரமான ஐந்து எழுத்தை சிந்தித்து இருப்பவர்க்குத் துன்பம் என்றைக்கும் ஏற்படாது. அதனை நம்பாது தாம் அறிவுடையர் என எண்ணிச் செய்யும் செயல்கள் யாவும் அவர்கள் விதி வழிசெல்லும் அறிவுமயக்கத்தின் பாற்படும்.*

**தண்ணீர் நில நலத்தால் தக்கோர் குணம் கொடையால்**
**கண்ணீர்மை மாறாக் கருணையால் – பெண்ணீர்மை**
**கற்பு அழியா ஆற்றால் கடல் சூழ்ந்த வையகத்துள்**
**அற்புதமாம் என்றே அறி.** 16

*கடல் சூழ்ந்த – கடலால் சூழப்பட்ட; வையகத்துள் – பூமியில்; தண்ணீர் நில நலத்தால் - தண்ணீரின் சிறப்பு நிலத்தின் தன்மையால் ; தக்கோர் குணம் கொடையால் - நல்லவரது சிறப்பு கொடையாலும்; கண்நீர்மை மாறாத கருணையால் - கண்களின் சிறப்பு மாறாத அருளினாலும்; பெண் நீர்மை கற்பழியா ஆற்றால் – பெண்ணின் சிறப்பு கற்பழியாத் திறனாலும்; அற்புதமாம் – மேன்மை யுடைய வையாம்; என்றே அறி – என்று அறிந்து கொள்.*

*நிலத்தின் நலத்தால் நீருக்குப் பெருமை; கொடையினால் நல்லவருக்குப் பெருமை; அருளினால் கண்களுக்குப் பெருமை; கற்பினால் பெண்களுக்குப் பெருமை.*



**செய் தீ வினை இருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்**
**எய்த வருமோ இருநிதியம் – வையத்து**
**அறும் பாவம் என்ன அறிந்து அன்று இடார்க்கு இன்று**
**வெறும் பானை பொங்குமோ மேல்?** 17

*செய் தீவினை இருக்க – முன் பிறவியிலே செய்த தீய வினைகள் இருக்கவும்; தெய்வத்தை நொந்தக்கால் – தெய்வத்தை நொந்து கொண்டால்; எய்த வருமோ இரு நிதியம் – சகல சம்பத்தும் வந்து விடுமோ? வையத்து – பூமியிலே; அறும் பாவம் என்று – பாவம் அறுந்து போகும் என்று அறிந்து; அன்று இடார்க்கு – வாழும் காலத்திலே தர்மம் செய்யாதவர்க்கு; இன்று – கடைசிக் காலத்திலே; வெறும் பானை – ஒன்று மில்லாத வெற்றுப் பானை; பொங்குமோ மேல் – மேலே பொங்குவ துண்டோ?*

*செல்வம் இருக்கும் போது புண்ணியமாம் தர்மம் செய்து பாவங்களைக் குறைக்காது தீவினையை வளர்த்து விட்டு கடைசிக் காலத்தில் வறுமை வந்துற்றதும் தெய்வத்தை நொந்து கொள்வதால் எவ்வித பயனும் ஏற்பட மாட்டாது.*

**பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்**
**உற்றார் உகந்தார் என வேண்டார் – மற்றோர்**
**இரணங் கொடுத்தால் இடுவர் இடாரே**
**சரணம் கொடுத்தாலும் தாம்.** 18

பேர் உலகில் – பெரிய உலகத்திலே; பெற்றார் – நம்மைப் பெற்றவர்; பிறந்தார் – நம்முடன் பிறந்தவர்; பெருநாட்டார் – நமது நாட்டவர்; உற்றார் – நமக்கு உறவினர்; உகந்தவர் – நமக்கு வேண்டியவர்; என – என்று; வேண்டார் – அன்பு பாராட்டாதவர்கள்; மற்றோர் – உறவு அல்லாத பகைவர்கள்; இரணம் கொடுத்தால் இடுவர் – காயப்படுத்தினால் கொடுப்பர்; சரணம் கொடுத்தாலும் இடார் – உறவினர் காலில் விழுந்து வணங்கினாலும் அவருக்குக் கொடார்.

*தம்மை அண்டிய பெற்றார், சகோதரர், சுற்றத்தார் நண்பர்கள் போன்றவர்கள் அடிபணிந்து கேட்டாலும் அவருக்குக் கொடுக்க மாட்டாத உலோபிகள்; கள்வர் போன்ற பகைவர் அவர்களுக்கு ஊறு செய்து துன்புறுத்தினால் அவருக்கே கொடுப்பர்.*

**சேவித்தும் சென்று இரந்தும் தென்னீர்க்கடல் கடந்தும்**
**பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும் - போவிப்பம்**
**பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால்**
**நாழி அரிசிக்கே நாம்.** 19

நாம் – நாம்; சேவித்தும் – பிறரிடத்திலே சென்று சேவகம் செய்தும்; சென்று இரந்தும் – பிறரிடத்திலே சென்று யாசித்தும்; தென்னீர்க் கடல் கடந்தும் – நீல நிறமுடைய கடலைக் கடந்து சென்றும்; பா வித்தும் – பணத்திற்காக பாடல்களை ஆக்கியும்; பார் ஆண்டும் – நாட்டை ஆண்டும்; பாட்டு இசைத்தும் – இசைபாடியும்; பாழின் உடம்பை – ஞானத்தைத் தேடுவதற்கான இவ் உடலை; வயிற்றின் கொடுமையால் – வயிற்று பசிக் கொடுமையால்; நாழி அரிசிக்கே – ஒரு படி அரிசிக்காக; போவிப்பம் - அழித்து விடுகிறோம்.

*தெய்வீகத்தை உணர்வதற்காக ஆக்கப்பட்ட நம் உடலை அதற்காகப் பயன்படுத்தாது, வயிறு வளர்ப்பதற்காக பற்பல வினைகளைச் செய்து வீணாக்கி விடுகிறோம்.*



**அம்மி துணையாக ஆறு இழிந்தவாறு ஒக்கும்**
**கொம்மை முலை பகர்வார் கொண்டாட்டம் – இம்மை**
**மறுமைக்கும் நன்று அன்று மாநிதியம் போக்கி**
**வெறுமைக்கு வித்தாய் விடும்.** 20

கொம்மை முலை பகர்வார்தம் கொண்டாட்டம் – திரண்ட மார்புகளை உடைய வேசியரின் உறவானது; அம்மி துணையாக ஆறு இழிந்த வாறொக்கும் – அம்மிக் கல்லைத் தெப்பமாகக் கொண்டு ஆற்று வெள்ளத்திலே இறங்கியது போன்றதாகும்; மாநிதியம் போக்கி வெறுமைக்கு வித்தாய் விடும் – எவ்வளவு பெரு நிதி இருந்தாலும் அவ்வளவையும் போக்கி வறுமைக்கு வித்திடும்; இம்மை மறுமைக்கும் நன்று அன்று – இப்பிறவிக்கும் மறுபிறவிக்கும் கூட நன்மைதராது.

*விலை மாதரின் உறவு ஒருவருக்கு தாம் தேடிய செல்வம் அனைத்தையும் அழித்து இல்லாது ஒழித்து விடுவதோடு அடுத்த பிறவிக்கும் தொடர்ந்து துன்பத்தைக் கொடுக்கும்.*

**நீரும் நிழலும் நிலம் பொதியும் நெற்கட்டும்**
**பேரும் புகழும் பெருவாழ்வும் – ஊரும்**
**வருந் திருவும் வாழ் நாளும் வஞ்சமிலார்க்கு என்றும்**
**தரும் சிவந்த தாமரையாள் தான்.** 21

*வஞ்சம் இலார்க்கு – வஞ்சமற்ற நெஞ்சத்தினருக்கு; நீரும் – நீர் வளமும்; நிழலும் – இருக்க வீடும்; நிலம் பொதியும் – நிலம் நிறைந்த நெற்கட்டும்; பேரும் – நல்ல பேரும்; புகழும் – கீர்த்தியும்; பெருவாழ்வும் – பெருமைமிக்க வாழ்வும்; ஊரும் – ஊரவர்நட்பும்; வருந் திருவும் – வளரும் செல்வமும்; வாழ் நாளும் – நீண்ட ஆயுளும்; சிவந்த தாமரையாள் – செந் தாமரை மலரிலே வீற்றிருக்கின்ற திருமகள்; என்றும் – எந்நாளும்; தரும் – தருவாள்.*

*அழுக்காறு, வஞ்சம் இல்லாத நெஞ்சத்தார்க்குச் சகல விதமான ஐஸ்வரியங்களையும் திருமகள் குறைவின்றி அருளுவாள்.*

**பாடு பட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்**
**கேடுகெட்டமானிடரே கேளுங்கள் - கூடுவிட்டிங்கு**
**ஆவிதான் போயினபின் யாரே அநுபவிப்பார்**
**பாவிகாள் அந்தப் பணம்.** 22

*பாடு பட்டு தேடி பணத்தை – கஸ்டப்பட்டுச் சம்பாதித்த செல்வத்தை; புதைத்து வைத்து - தானும் உண்ணாது பிறர்க்கும் கொடாது பூமிக்கடியில் புதைத்து வைக்கும்; கேடுகெட்ட – அறிவற்ற; மானிடரே - மனிதர்களே; கேளுங்கள் - கேட்பீராக; கூடுவிட்டு – உடலை விட்டு; ஆவிதான் போயின பின் – உயிர் போன பின்; பாவிகாள் – பாவிகளே யாரே அநு பவிப்பார் – அதனை யார் அநுபவிப்பார்; அந்தப் பணம் – அந்தப் பணத்தை*

*கஸ்டப்பட்டுத் தேடிய செல்வத்தைத் தானும் அனுபவியாது பிறரும் அனுபவிக்க வொட்டாது பூமிக்கடியில் புதைத்து வைப்பதால் அச்செல்வம் எவர்க்கும் பயன்படாது போய் விடும். கஸ்டப்பட்டுத் தேடியதின் பலன் என்ன.*



**வேதாளம் சேருமே வெள் எருக்குப் பூக்குமே**
**பாதாள மூலி படருமே – மூதேவி**
**சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே**
**மன்று ஓரம் சொன்னார் மனை.** 23

மன்று – நீதி மன்றத்திலே; ஓரம் – ஒருதலைப்பட்சமாக; சொன்னார் – நீதி வழங்கினார்; மனை – வீட்டில்; வேதாளம் சேரும் – பேய் அடையும்; வெள் எருக்குப் பூக்கும் – வெள் எருக்கு மலரும்; பாதாள மூலி படரும் – பாதாள மூலிக் கொடி படரும்; மூதேவி சென்று இருந்து வாழ்வாளே – மூதேவி குடிபுகுவாள்; சேடன் குடிபுகும் – பாம்பு குடிபுகும்.

*நீதி மன்றத்திலே நடுநிலை தவறி பட்சபாதம் பேசினவர் கெட்டு அழிவதுடன் அவர்கள் குடியும் வீடும் பாழாகும்.*

**நீறு இல்லா நெற்றி பாழ்; நெய் இல்லா உண்டிபாழ்**
**ஆறு இல்லா ஊருக்கு அழகுபாழ் – மாறில்**
**உடன் பிறப்பு இல்லா உடம்பு பாழ்; பாழே**
**மடக் கொடி இல்லா மனை.** 24

நீறு இல்லா - திருநீறு அணியாத ; நெற்றி பாழ் - நெற்றி ஒளி குன்றும்; நெய் இல்லா - நெய் சேர்க்காத ; உண்டிபாழ் - உணவு சுவைகுன்றும்; ஆறு இல்லா ஊருக்கு - ஆறு இல்லாத நகருக்கு ; அழகு பாழ் - இயற்கை எழில் அற்றுப்போகும்; மாறில் உடன் பிறப்பு - ஒற்றுமையான சகோதரம் ; இல்லா உடம்பு பாழ் - இல்லாத பிறவி வீணாகும் ; பாழே மடக்கொடி இல்லா மனை - மனைவி இல்லாத வீடும் அழிந்து போம்.

*திருநீறு அணியாத நெற்றியும், நெய் சேராத உணவும், ஆறு இல்லாத நகரும், ஒற்றுமையான சகோதரம் இல்லாத பிறவி யும், அடக்கம் உள்ள இல்லாள் இல்லாத வீடும் சிறப்பு அடையா.*

**ஆன முதலில் அதிகம் செலவு ஆனால்**
**மானம் அழிந்து மதி கெட்டுப் – போன திசை**
**எல்லோர்க்கும் கள்ளனாய் ஏழ் பிறப்பும் தீயனாய்**
**நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.** 25

ஆன முதலில் அதிகம் செலவு ஆனால் - பொருந்தி உள்ள செல்வத்தை விட அதிகம் செலவு செய்தால் ; மானம் அழிந்து மதி கெட்டுப் – அவமானப் பட்டு அறிவு தடுமாறி; போன திசை எல்லோர்க்கும் கள்ளனாய் - போகு மிடமெல்லாம் எல்லோராலும் கள்ளன் எனும்படியும்; ஏழ் பிறப்பும் தீயனாய் - ஏழுவகைப் பிறவியிலும் தீயவனாகவும்; நல்லார்க்கும் பொல்லனாம் - நட்புக் கொண்ட நல்லவர்களுக்கும் கூடாத வனாகவும் ஆகநேரும் ; நாடு - தெரிந்து கொள்வாய்.

*வரவிற்கு மீறிய செலவு செய்தால் அவமானப்பட்டு பழி பாவங்களுக்கு ஆளாகி செல்லுமிடம் எல்லாம் அல்லலுற நேரும்.*

**மானம் குலம் கல்வி வண்மை அறிவுடைமை**
**தானம் தவம் உயர்ச்சி தாளாண்மை – தேனின்**
**கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்**
**பசி வந்திடப் பறந்து போம்.** 26

பசி வந்திட - ஒருவருக்கு பசி வந்துவிட்டால் ; மானம் குலம் கல்வி - புகழ் குடும்பம் கற்ற கல்வி ; வண்மை அறிவுடைமை - வீரம் நுண்ணறிவு ; தானம் தவம் உயர்ச்சி தாளாண்மை – தருமசிந்தை புலனொடுக்கம் பெருமை ஊக்கம் ; தேனின் கசிவந்த - தேன் போலும் இனிமையாக ; சொல்லியர் மேல் காமுறுதல் - பேசுகின்ற பெண்களிடத்து கொண்ட மயக்கம்; பத்தும் பறந்து போம் - ஆகிய பத்தும் பறந்து போய்விடும்.



*ஒருவருக்கு பசி வந்துவிட்டால் ,புகழ் குடும்பம் கற்ற கல்வி வீரம் நுண்ணறிவு தருமசிந்தை புலனொடுக்கம் பெருமை ஊக்கம் பெண்களிடத்து கொண்ட மயக்கம் ஆகிய பத்தும் மறந்து விடும்.*

**ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்றாகும்**
**அன்றி அதுவரினும் வந்தெய்தும் – ஒன்றை**
**நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்**
**எனையாளும் ஈசன் செயல்.** 27

ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்றாகும் - நாம் ஒன்றை எதிர்பார்த்திருக்க அதுவல்லாத வேறொன்று நிகழவும் கூடும் ; அன்றி அதுவரினும் வந்தெய்தும் – அல்லா விட்டால் எதிர்பார்த்தது நிகழவும் கூடும் ; ஒன்றை நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும் - எதையும் நினைத்திராத போது அது வந்து அமைந்து விடவும் கூடும் ; எனை யாளும் ஈசன் செயல் - இவை எல்லாம் இறைவன் சித்தப்படியே நடப்பன.

*நாம் எதிர்பார்த்தபடி எதுவும் நடப்பதில்லை எமது வினைகளுக்கு ஈடாக இறைவன் எண்ணப்படிதான் யாவும் நடக்கும்.*

**உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்**
**எண்பது கோடி நினைந்து எண்ணுவன - கண்புதைந்த**
**மாந்தர் குடி வாழ்க்கை மண்ணின் கலம்போலச்**
**சாந்துணையும் சஞ்சலமே தான்.** 28

கண்புதைந்த மாந்தர் - அறிவுக்கண் இல்லாத மக்கள்; குடிவாழ்க்கை - வாழ்க்கை என்பது; மண்ணின் கலம்போல - மட்பாண்டத்தைப் போன்றது; உண்பது நாழி உடுப்பது

நான்கு முழம் - உண்பது ஒருபடி அன்னம், உடுப்பதோ நாலு முழ வேட்டி; நினைந்து எண்ணுவன - ஆசைப்பட்டு நினைப் பவையோ ; எண்பது கோடி - எண்பது கோடி விடயங் களாகும்.; சாந்துணையும் சஞ்சலமே தான்- (அதனால்) மரணம் மட்டும் மனச் சஞ்சலமே.

*கிடைப்பதைக் கொண்டு திருப்தி அடையாது, தன் தகுதிக்கு மேல் ஆசைப்பட்டால் சாகும் வரை சஞ்சலப் படவே வேண்டியிருக்கும்.*

**மரம் பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி**
**வருந்தி அழைப்பார் யாரும் அங்கில்லை - சுரந்து அமுதம்**
**கன்று ஆ தரல் போல் கரவாது அளிப்பரேல்**
**உற்றார் உலகத் தவர்.** 29

மரம் பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி வருந்தி அழைப்பார் யாரும் அங்கில்லை -மரத்தில் கனிகள் கனிந் திருந்தால் வெளவாலை வாஎன்று கஸ்டப்பட்டு யாரும் அழைப்பதில்லை ; கன்று ஆ - தன் கன்றுக்கு பசுவானது ; சுரந்து அமுதம் தரல் போல் - பாலை ஒளிக்காது கொடுப்பது போல; கரவாது அளிப்பரேல் உற்றார் உலகத்தவர் - மறைக் காது கொடுத்தால் உலகத்தார் எல்லோரும் உறவாவர்.

*எவரும் அழையாத போதும் வெளவால் பழம் நிறைந்த மரத்தை நாடிவருவது போல, தாராளமாக ஒளிக்காது கொடுப்பவரை தேடி உலகத்தவர் உறவு கொள்ள விளைவர்.*

**தாம் தாம் முன் செய்த வினை தாமே அநுபவிப்பார்**
**பூந்தாமரையோன் பொறி வழியே – வேந்தே**
**ஒறுத்தாரை என் செயலாம் ஊரெல்லாம் ஒன்றா**
**வெறுத்தாலும் போமோ விதி.** 30



**பூந்தாமரையோன் பொறி வழியே** – தாமரைப் பூவில் இருக்கும் பிரமன் விதிப்படி; **தாம் தாம்** – ஒவ்வொருவரும்; **முன் செய்த வினை** – முற் பிறப்பிலே செய்த நல்வினை தீவினைகள்; **தாமே அநுபவிப்பார்** – அவர் அவர் தாமே அநுபவிப்பார்கள்; **வேந்தே ஒறுத்தாரை என் செயலாம்** – அரசே தண்டித்தவர்களை என்ன செய்ய முடியும்; **ஊர் எல்லாம் ஒன்றா** – ஊரார் ஒன்றாகக் கூடி; **வெறுத்தாலும்** – மறுத்தாலும்; **போமோ விதி** - அவர்களது விதி நீங்குமோ.

*அரச தண்டனைக்கு உள்ளானவனை ஊரார் எல்லாரும் சேர்ந்து தடுத்தாலும் பிரமனால் அவனுக்கு விதிக்கப்பட்ட விதியை மாற்ற முடியாது. முற் பிறப்பில் அவன் செய்த தீவினைப் பயனை அவனேதான் அனுபவிக்க வேண்டும்.*

**இழுக்கு உடைய பாட்டிற்கு இசை நன்று சாலும்**
**ஒழுக்கம் உயர் குலத்தின் நன்று– வழுக்குடைய**
**வீரத்தின் நன்று விடாநோய் பழிக்கஞ்சாத்**
**தாரத்தின் நன்று தனி.** 31

இழுக்கு உடைய – குற்றமுடைய; பாட்டிற்கு – பாட்டை விட; இசை நன்று – சப்தமே நல்லது; சாலும் ஒழுக்கம் உயர் குலத்தின் நன்று – நல்ல ஒழுக்கம் காப்பது, உயர்ந்த குலத்தில் பிறத்தலைவிட நல்லது; வழுக்குடைய வீரத்தின் – தவறுள்ள வீரத்தை விட; விடாநோய் நன்று – தீராத நோய் நல்லது; பழிக்கு அஞ்சா தாரத்தின் – பழிச்சொல்லுக்கு அஞ்சாத மனைவியைவிட; தனி நன்று – தனியாக வாழ்வது நன்று.

*தவறுள்ள பாடலும், ஒழுக்கமில்லாத உயர் குடிப்பிறப்பும், ஆண்மையற்ற வீரமும், உலகம் தூற்றும்படி நடக்கும் மனைவி யுடன் கூடிய வாழ்வும் தீராத அவமானத்தைத் தருவன.*

**ஆறிடும் மேடும் மடுவும் போலாம் செல்வம்**
**மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர் – சோறிடும்**
**தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக**
**உண்ணீர்மை வீறும் உயர்ந்து.** 32

மாநிலத்தீர் - உலக மக்களே; செல்வம் – செல்வம்; ஆறு இடும் – ஆற்று வெள்ளத்தில் தோன்றும்; மேடும் மடுவும் போலாம் – மேடு பள்ளம் போன்று வளரும் தேயும்; சோறு இடும் தண்ணீரும் வாரும் – எல்லோருக்கும் உண்ண உணவும் அருந்தத் தண்ணீர் கொடுங்கள்; தருமமே சார்பாக – செய்யும் தருமமே துணையாகி; உண் நீர்மை உயர்ந்து வீறும் – உள்ளத்திலே ஒழுக்கம் ஓங்கி விளங்கும்.

*ஆற்றிடை மேடு பள்ளம் போல செல்வம் நிலையற்றது. உண்ண உணவும், குடிக்க நீரும் கொடுக்கின்ற தர்மம் உள்ளத்து ஒழுக்கத்தை உயர்த்தி நிலையான பெருமையைத் தரும்.*

**வெட்டனவை மெத்தனவை வெல்லாவாம் வேழத்தில்**
**பட்டு உருவும் கோல் பஞ்சில் பாயாது – நெட்டிருப்புப்**
**பாரைக்கு நெக்கு விடாப் பாறை பசுமரத்தின்**
**வேருக்கு நெக்கு விடும்.** 33

வேழத்தில் பட்டு உருவும் கோல் – யானை மீது பட்டு உருவும் அம்பு; பஞ்சில் பாயாது – பஞ்சுப் பொதியில் பாயாது; நெட்டு இருப்புப் பாரைக்கு – நீண்ட இரும்பினால் ஆன கட்டப் பாரைக்கு; நெக்கு விடாப் பாறை – பிளக்காத கற்பாறை; பசுமரத்தின் வேருக்கு நெக்கு விடும் –-பச்சை மரத்தின் வேருக்குப் பிளந்து விடும்; வெட்டனவை – வெடுக்கென்ற பேச்சு; மெத்தனவை வெல்லாவாம் – இனிமையான பேச்சை வெல்லாது.



*இன்சொல்லால் எந்த இயலாத காரியத்தையும் சாதித்து விடலாம். கடப்பாரையை விட மரத்தின் மெல்லிய வேரே பாறையை இலகுவாகப் பிளந்து விடும் சக்தி வாய்ந்தது.*

**கல்லானே ஆனாலும் கைப்பொருள் ஒன்று உண்டாயின்**
**எல்லோரும் சென்று அங்கு எதிர் கொள்வர் - இல்லானை**
**இல்லாளும் வேண்டாள் மற்றீன்றெடுத்த தாய் வேண்டாள்**
**செல்லாது அவன் வாயிற் சொல்.** 34

கல்லானே ஆனாலும் – கல்வி அறிவு இல்லாதவனே யானாலும்; கைப் பொருள் ஒன்று உண்டாயின் – கையிலே பொருள் என்பது மாத்திரம் இருந்தால்; எல்லோரும் சென்று எதிர் கொள்வர் – எல்லோரும் போய் எதிர் கொண்டு உபசரிப் பார்கள்; இல்லானை – பொருள் இல்லாதவனை; இல்லாளும் வேண்டாள் –மனைவியும் விரும்ப மாட்டாள்; ஈன்று எடுத்த தாய் வேண்டாள் –பெற்ற தாயும் விரும்பாள்; செல்லாது அவன் வாயிற் சொல் – அவன் கூறும் சொல்லுக்கு மதிப்பு இராது.

*படிப்பில்லா விட்டாலும் பணமிருந்தால் எல்லோரும் மதிப்பர். பணம் இல்லாதவனுடைய சொல்லை பெற்ற தாயும் கட்டிய மனைவியும் கூட மதிக்க மாட்டார்கள்.*

**பூவாதே காய்க்கும் மரமும் உள மக்கள் உளும்**
**ஏவாதே நின்று உணர்வார் தாம் உளரே – தூவா**
**விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்கு**
**உரைத்தாலும் தோன்றாது உணர்வு.** 35

பூவாதே காய்க்கும் மரமும் உள – பூவாமலே காய்க்கின்ற மரமும் உண்டு; மக்கள் உளும் ஏவாதே நின்று உணர்வார் தாம் உளரே – மனிதர்களிலும் சொல்லாமல் தாமே அறிந்து உணர் பவர்கள் இருக்கின்றனர்; தூவா விரைத்தாலும் நன்றாகா

வித்து எனவே – நன்றாக விதைத்தாலும் முளையாத விதை போல; பேதைக்கு உரைத்தாலும் – மூடனுக்கு எடுத்துக் கூறினாலும்; தோன்றாது உணர்வு – அறிவு தோன்றாது.

*பூவாதே காய்க்கும் மரங்கள் போல தாமாகவே குறிப்பாக அறியும் மனிதரும் உளர். பண்படுத்தி விதைத்தாலும் முளை யாத விதை போன்று எதையும் புரியமுடியாதவரும் உள்ளனர்.*

**நண்டு சிப்பி வேய் கதலி நாசமுறும் காலத்தில்**
**கொண்டகரு அழிக்கும் கொள்கை போல் – ஒண் தொடி**
**போதம் தனம் கல்வி பொன்ற வரும் காலம் அயல்**
**மாதர் மேல் வைப்பார் மனம்.** 36

ஒண்தொடி – ஒளி பொருந்திய வளையலை அணிந்த வளே; நண்டு சிப்பி வேய் கதலி – நண்டும் சிப்பியும், மூங்கிலும், வாழையும்; நாசமுறும் காலத்தில் – தாம் அழியும் போது; கொண்டகரு அழிக்கும் – தாம் கொண்ட குஞ்சு, முத்து, அரிசி, குலை முதலியவற்றை இழந்து விடும்; கொள்கை போல் -தன்மை போல; போதம் தனம் கல்வி – வித்தை,செல்வம், அறிவு இவை; பொன்ற வரும் காலம் – அழியும் காலத்திலே; அயல் மாதர் மேல் வைப்பார் மனம் – பிற பெண்கள்மீது ஆசை கொள்வார்கள்.

*தனது அறிவு, செல்வம், கல்வி எல்லாம் அழியும் காலம் வரும்போது ஒருவன் பிறர் மனைவியர் இடத்து இச்சை கொள்வான்.*

**வினைப் பயனை வெல்வதற்கு வேதம் முதலாம்**
**அனைத்தாய நூலகத்தும் இல்லை – நினைப்பது எனக்**
**கண்ணுறுவது அல்லால் கவலைப்படேல் நெஞ்சே மெய்**
**விண்ணுறுவார்க்கு இல்லை விதி.** 37



வினைப் பயனை வெல்வதற்கு – தாம் செய்த வினையின் பயனை வெற்றிகொள்வதற்கு; வேதம் முதலாம் – வேதம் முதலிய; அனைத்தாய நூலகத்தும் – எல்லா நூல்களிலும்; இல்லை – வழி இல்லை; மெய் விண் உறுவார்க்கு – மெய் வீடாகிய முத்தி நெறி நிற்பவர்க்கு; விதி இல்லை – விதி என்று ஒன்று இல்லை. நினைப்பது எனக் கண்ணுறுவது அல்லால் – தாம் நினைப்பதைத்தான் காண்பதே அல்லாது; கவலைப் படேல் நெஞ்சே - மனமே துக்கப்படாதே.

*வினைப் பயனை வெல்லும் மார்க்கம் வேதம் முதலாம் நூற்கள் எதிலும் கிடையாது. நம் எண்ணங்களே நம் விதிக்குக் காரணம் என்று உணர்ந்தவர்கள் தம் எண்ணங்களை ஒரு மைப்படுத்தி முத்தி நெறி நிற்பவர்களுக்கு விதி என்பதில்லை.*

**நன்றென்றும் தீதென்றும் நானென்றும் தானென்றும்**
**அன்றென்றும் ஆமென்றும் ஆகாதே – நின்ற நிலை**
**தானதாம் தத்துவமாம் சம்பறுத்தார் யாக்கைக்குப்**
**போனவா தேடும் பொருள்.** 38

சம்பு அறுத்தார் யாக்கைக்கு போனவாறு - பிறப்பறுத்த வர்கள் பிறவியை எடுத்தவாறு; தேடும் பொருள் – தேட வேண்டிய பொருளானது; நன்றென்றும் – இது நல்லது என்றும்; தீதென்றும் – இது தீயது என்றும்; நானென்றும் – நான் என்றும்; தான் என்றும் – அவன் என்றும்; அன்று என்றும் – இல்லை என்றும்; ஆம் என்றும் – உண்டு என்றும்; ஆகாதே – பேதமற்று ; நின்ற நிலை –நிற்கும் நிலையே ; தான் அதுவாம் தத்துவமாம் – இதுதான் தான் அது வான ஏகத்துவ நிலைத் தத்துவமாகும்;

*உடலினில் ஆண்டவனை உணர்ந்து பேதமின்றி நிற்றலே உண்மையான பிறப்பறுத்த தத்துவநிலை.*

**முப்பதாம் ஆண்டு அளவில் மூன்றற்று ஒருபொருளை**
**தப்பாமல் தன்னுள் பெறான் ஆயின் – செப்பும்**
**கலை அளவே ஆகுமாம் காரிகையார் தங்கள்**
**முலை அளவே ஆகுமாம் மூப்பு.** 39

முப்பதாம் ஆண்டு அளவில் மூன்றற்று ஒரு பொருளை -முப்பது வயதில் மூன்றும் அற்று ஒரு பொருளாம் இறைவனை; தப்பாமல் பெறானாயின் - தவறாது உணராவிட்டால்; காரிகையார் தங்கள் முலையளவே ஆகுமாம் மூப்பு – பெண்களது முதுமை அவர் தனங்களின் அளவில் தெரிவது போல; செப்புங்கலை அளவே ஆகுமாம் - *கற்றஅளவே அவன் அறிவு*

*முப்பது வயதுக்குள் மண், பெண், பொன் ஆசைகளை நீக்கி தன்னுள் கடவுளை உணராவிட்டால், அவன் இளமையிற் கற்ற அளவே தெளிவு ஏற்படும். பூரணத்துவம் பெறமுடியாது*

**தேவர் குறளும் திரு நான் மறை முடிவும்**
**மூவர் தமிழும் முனி மொழியும் – கோவை**
**திருவாசகமும் திருமூலர் சொல்லும்**
**ஒரு வாசகம் என்றுணர்.** 40

தேவர் குறளும் – திருக்குறளும்; திருநான்மறை முடிவும் -வேதங்களின் முடிவும்; மூவர் தமிழும் -மூவர் தேவாரங் களும்; முனிமொழியும்-சிவஞான போதமும்; கோவை திருவாசகமும் – திருக்கோவையாரும், திருவாசகமும்; திரு மூலர் சொல்லும் – திருமந்திரமும்; ஒரு வாசகம் என்றுணர் – ஒன்றே என்றறி.

*திருக்குறள், திருமந்திரம், வேதங்கள், சிவஞான போதம், தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், எல்லாம் ஒரு பொருளைக் கூறுவன.*

*நல்வழி மூலமும் உரையும் முற்றும்.*

வெற்றி

எல்லாம் திருவருட் சம்மதம்



"உள்ளொளி தோன்றில் உணரில் அருளொளி
அவ்வொளி ஆதி ஒளி." – ஔவை குறள்

# தத்துவஞானத் தவச்சாலை
# THEOSOPHICAL HERMITAGE
## THE COLOMBO ARULOLI NILAYAM

31/21, Dawson Street, Colombo - 2. Tel. : 3314

---

**ஔவையின் மனுதத்துவம் விலை ரூபா. 60/=**